### மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## மாலை—18 15184






உரையாசிரியர்:

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

## விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

---

## பொருளடக்கம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

(சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச்செய்த
தேவாரத் திருப்பதிக வெளியீடு)

## மாலை — 18

உரையாசிரியர் :

சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ர பிரசார பூஷணம்,
சிவபுராணக் காவலர், சிவபுராணச் சக்கரவர்த்தி
ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
(சங்கரன் அடிமை)



பிரசுரம் :

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா

5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை - 600 033.

 31-5-1985 [விலை ரூ. 3-00

## சைவ சமயாசாரியர்

# நால்வர் துதி






| திருஞான சம்பந்தர் | திருநாவுக் கரசர் | சுந்தர மூர்த்திகள் | மாணிக்க வாசகர் |
|---|---|---|---|

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.

# திருஞானசம்பந்தர்



காழிவருந்தவவேந்தர், கவுணியர் தம்
குலதிலகம், ஞாலமெலாம் உய்திபெற
ஞானபோனகமுண்டான், மன்னியசீர்ச்
சண்பை முத்தமிழ் கெழுவிரகன், நான்மறையின்
நற்பொருளை நற்றமிழில் விரித்தபிரான்,
திருஞானசம்பந்தர்.

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்



## ஸமர்ப்பணம்

### ஓம் ஸ்ரீ பவாய நம:

சிவபெருமானின் அருச்சனைக்குரிய அஷ்டோத் தரசத நாமங்கள் எனப்படும் 108 திருநாமங்களுள் பவன் (பவ:) எனப்படுவது 18-வது திருநாமமாகும். வேதத்தில் தனியாக எடுத்து ஓதப்பட்டுள்ள பவன், சர்வன், ஈசானன், பசுபதி, உருத்திரன், உக்கிரன், பீமன், மஹாதேவன் என்ற எட்டுத் திருநாமங்களுள் பவன் என்பது முதன்மை யானதாகும். ''பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னாள் அழைத்தால் இவனெனைப் பன்னாளழைப் பொழியான் என்று எதிர்ப்படுமே'' என்பது அப்பரடி களின் அருள்வாக்கு.

பவன் என்ற பெயருக்கு யாண்டும் வஸ்துவனைத் தையும் ஊடுருவி நிற்கும் சத்துப்பொருளான பிரமம் என்றும் உலகமனைத்தையும் படைத்தவர், உலகமனைத் தையும் தாங்குபவர் என்றும் பெரியோர் பொருள் கூறு வர். இத்தகைய மஹத்துவம் வாய்ந்த ஓம் பவாய நம: என்ற 18-வது திருநாமமந்திரத்தால் ஈசனின் எழிலடி இறைஞ்சி, இந்தப் பதினெட்டாவது ஞானத்தமிழ்மாலை யினை ஸமர்ப்பிக்கும் சிவபுண்ணியத்தைப் பெறுகின்றேன்.

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
உரையாசிரியர்

சிவம்



மாதுஸ்ரீ ஜானகி அம்மாள்

தோற்றம்: 3-12-1903

சிவலோகப் பிராப்தி: 2-6-1984

நினைவு அஞ்சலி கட்டுரை இம்மாலையில் வெளியிடப் பட்டுள்ளது.

5-2

உ
சிவாயநம:

# மாதுஸ்ரீ ஜானகி அம்மாள்

''கற்பூரம் தன்னைக் கரைத்துக்கொண்டு ஒளிகொடுக்கும்''
''மெழுகுவர்த்தி தன்னை உருக்கிக்கொண்டு
ஒளிகொடுக்கும்''

இவை மனிதர்களாகிய நாம் கண்கூடாகப் பார்ப்பது. கற்பூரத்தைப் போலவும், மெழுகுவர்த்தியைப் போலவும் ஒரு மனிதப்பிறவி தன் உற்ருருக்கும் சுற்றத்தினருக்கும் ஒளி கொடுத்தது. ஆம், இந்த உதாரணம் எங்கள் அன்புத்தாய்-தெய்வம் - குடும்ப ஒளியாக இருந்த மாதுஸ்ரீ ஜானகி அம்மாளுக்கு மிகவும் பொருந்தும். சீரும் சிறப்பும் மிக்க வேத வித்துக்கள் பரம்பரையிலே வடஆற்காடு ஜில்லா மோசூர் கிராமத்தைப் பூர்வீகமாகக் கொண்ட பிரம்மஸ்ரீ சிவராம சாஸ்திரிகளின் (சோளிங்கபுரத்தில் வக்கீலாக இருந்தவர்) மூத்தமகளாக 1903-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 3-ம் நாள் எங்கள் தாயார் பிறந்தார். (அண்ணமலை தீபத்துக்கு முன் தினம்). செங்கல்பட்டு ஜில்லா பணையூர் கிராமத்தைப் பூர்வீகமாகக் கொண்ட மற்ருெரு வேதவித்து பரம்பரையைச் சேர்ந்த எங்கள் தகப்பனார் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு (Author "Gleanings from Gita") வாழ்க்கைத் துணைவியாக அமைந்த எங்கள் தாயாருக்கு திருமணத்தின் போது வயது 11. ஆக 11 வயதிலிருந்தே நல்ல குடும்ப வாழ்க்கைக்கு அஸ்திவாரம் போட்டு பலவித மேடு பள்ளங்களைத் தாண்டி, சமாளித்து எல்லோருக்கும் நல்லவளாக, ஆலோசகராக, வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாகுபாடில்லாமல் சம பாவத்துடன்,

இன்முகத்துடன், அன்பு உள்ளத்துடன், குடும்ப வாழ்க்கை என்னும் படகை ஸம்ஸாரஸாகரத்தில் பள்ளிக்கூடம் செல்ல வேண்டிய வயதிலேயே செலுத்தினர். பள்ளியில் படித்தது மூன்றே வகுப்புகள். ஆனுல் படிக்காத மேதையான எங்கள் தாயார் மனக்கணக்காகப் பலவித வரவுசெலவுகள் பற்றிய விவரங்களை கம்ப்யூட்டர் வேகத்தில் மிகவும் ஞாபகத்துடன் சொல்லிவிடுவார்.

தன் குடும்பத்தினர், மற்றவர் என்ற பாகுபாடின்றி எல்லோரிடத்திலும் அன்பு செலுத்தினர். தனக்கென்று ஒரு பொருளுங் கேட்டதில்லை. சாப்பிட ஒரு பழம் வேண்டும் என்று கூடக் கேட்டதில்லை. ஆனுல் மற்றவர்களுக்கு அவரவர் ருசிக்கேற்றவாறு சமைத்துப் போடுவார். குழந்தைகளை யாரும் கோபித்துக் கொள்ளக்கூடாது என்று அடிக்கடி சொல்வார். குழந்தைகளை யார் கோபித்துக் கொண்டாலும் அவர்களைக் கடிந்து கொள்வார். எங்கள் தாயாரின் சுறுசுறுப்பில் எறும்பு கூடக் தோற்றுவிடும். சோர்வில்லாமல் அயராது, தளராது உழைத்து கீதையின் கர்மயோகிக்கு ஒரு இலக்கணமாகத் திகழ்ந்தார். 11 வயதிலே ஆரம்பித்து 81 வயது வரை உழைப்பு!

எங்கள் தகப்பனுர் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவர்கள் பகவத்கீதை எழுதி துவாதசி திதியில் 1958-ம் ஆண்டு ஜூன் மாதம் 14-ம் நாள் தமது 62 வது வயதில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் திருவடி சேர்ந்தார். பார்த்தார் ஸ்ரீ பரமேச்வரன்! யாருக்கும் கிடைக்காத ஒரு பெரும் பாக்கியத்தை எங்கள் தாயாருக்கு அளித்தார். 81-வது வயதிலே தன் முதுமையையும் பொருட்படுத்தாமல் சுறுசுறுப்பாகத் தன் குடும்பத்தினர் எல்லோருடனும் சென்ற ஆண்டு (1984) ஏப்ரல் 22-ம் நாள் காசிக்குக் கிளம்பினுர். திருவேணி ஸ்நானம், கங்கா ஸ்நானம் முடித்து காசியில் ஸ்ரீ விச்வநாதர், ஸ்ரீதேவி விசாலாக்ஷி ஸ்ரீதேவி அன்னபூரணி தரிசனம் செய்து ஸ்ரீ விச்வநாதருக்குத் தன் கையினுலேயே தேன் அபிஷேகம்

செய்து, முடிந்தவரை எல்லாக் கோவில்களையும் தரிசித்தார். பின்னல் நடக்கப் போகும் நிகழ்ச்சிக்கு முன்னேடியாக ஸ்ரீ காசி கௌடிமாதா கோவிலில் எங்கள் தாயாரின் முன்பல் தனி யாகப் பல வருஷங்களாக இருந்தது - திடீரென்று விழுந்தது. ஸ்ரீ கௌடிமாதா கோவிலில் தரிசனம் செய்தபின் எல்லோரும் சொல்வது "காசிபலன் எனக்கு — சோழிபலன் உனக்கு" என்பதாம். என்ன ஆச்சரியம்! மே மாதம் 1-ம்நாள் காசியை விட்டு கிளம்பியவர், மே மாதம் 2-ம் தேதி திடீரென்று ஸ்ரீ விச்வநாத தியானத்துடன் — காசி சிந்தனையுடன் — சிவநாம ஸ்மரணையுடன், ஸ்ரீ பரமேச்வரனின் திருவடியடைந்தார்.

கடைசியாக ஸ்நானம் செய்தது புனித கங்கையில், கடைசி யாகப் பருகியது கங்கை நீர். கடைசியாகத் தரிசனம் செய்தது ஸ்ரீ விச்வநாதரை. யாருக்கு கிட்டும் இந்த பாக்கியம்?

சிவசிவ

2-5-1984 அன்று சிவலோக ப்ராப்தி அடைந்த மாதுஸ்ரீ ஜானகி அம்மாள் நினைவாக அவரது புதல்வர் கள் ஸ்ரீ P. K. குமாரஸ்வாமி (Retd. Madras Telephones), ஸ்ரீ P. K. வேங்கடராகவன் (A. G's office, Madras), மகள் ஸ்ரீமதி சாரதா ஏகாம்பரம், மற்றும் குடும்பத்தினரால் வெளியிடப்பட்டது.

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# உரையாசிரியர் பணிவுரை

திருச்சிற்றம்பலம்

மேனாட் டமரர் தொழஇருப் பாரும் வினைப்பயன்கள்
தானாட் டருநர கிற்றளர் வாரும் தமிழர்தங்கள்
கோனாட் டருகர் குழாம்வென்ற கொச்சையர் கோன்கமலப்
பூநாட் டடிபணிந் தாரும் அல்லாத புலையருமே.

திருச்சிற்றம்பலம்.

ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி—36.
(நம்பியாண்டார் நம்பிகளருளியது — 11—ம் திருமுறை)

திருஞானசம்பந்தப் பெருமானது திருவடித் தாமரைகளைப் பணிந்தவர்கள் தேவர்கள் தொழ சுவர்க்கத்தில் இன்பமனுபவிப்பவர். அல்லாதவர்கள் தங்கள் வினைப்பயன்களுக்கேற்றபடி நரகத்திலே துன்பமுறுவர் என்பது மேற்காட்டிய திருப்பாடலின் கருத்தாகும். இத்தகைய பெருமை வாய்ந்த திருஞானசம்பந்தப் பெருமானது பதிகங்களை உரையுடன் வெளியிடும் ஞானபூசைப் பணியை மேற்கொண்ட நாம் சென்ற 17வது தமிழ்மாலையில் திருக்கழுமலத் திருப்பதிகம் ஒன்றும் சித்திரக்கவிகள் ஐந்தும் வெளியிட்டோம். இந்த 18 வது தமிழ்மாலையில் திருஞானசம்பந்தர் பாடியருளியவற்றுள் மேலும் சில சித்திரக்கவிகளைப் பிரசுரிக்கின்றோம்.

இந்தப் பதினெட்டாவது தமிழ் மாலைக்கும் தம் அரிய கருத்துக்களை வழக்கம் போல வழங்கியுதவிய இராணிப் பேட்டைப், நக்கீரன்வழியடிமை, புலவர் திரு. பி. மா. சோம சுந்தரனார் அவர்கட்கும், சென்னைப் பைந்தமிழ்ப் பாவலர்,

திரு. நாகராசனுர் (புலவர் தமிழ்நாகனுர்) அவர்கட்கும் நமது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிரும்.

வடசென்னையில் ஆத்திகத்துறையில் சிறந்து விளங்கும் பெரியார் தவத்திரு. அம்பாளின் மகன் அவர்கள் இந்த தமிழ்மாலை வெளியீட்டுக்காக மனமுவந்து ரூ. 51/- அம்பாளின் அருட்பிரசாதமாக அளித்தார்கள். அவர்களுக்கு நமது மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக்கொள்கிரும்.

சென்னை விருகம்பாக்கத்தில் வசிக்கும் அன்பர் திரு. P. K. வேங்கடராகவன், B. A., அவர்கள் நமது தமிழ் மாலைக்கு ஆரம்பமுதல் சந்தாதாரராகவும் ஆதரவாளராகவு மிருப்பவர். அவரது தாயார் மாதுஸ்ரீ ஜானகியம்மாள் அவர் கள் சென்ற ஆண்டு காசி விசுவேசுவரர் தரிசனம் செய்து கொண்டு திரும்புகையில் 2-5-1984 அன்று காசிவிசுவேசு வரரின் நினைவாகவேயிருந்து அவரது ஆன்மா விசுவேசுவரரின் திருவடியைச் சென்றடைந்தது. அன்னையாரின் நினைவாக, சிவஞானபூசைப் பணியான நமது தேவார உரை வெளி யீட்டுக்குத் திரு. P. K. வேங்கடராகவன் அவர்கள் தமது சார்பிலும் தமது குடும்பத்தினர் சார்பிலும் ரூ. 250/= நன் கொடையினை வழங்கி உதவியுள்ளார். அன்னையார் இறைவ னடி சேர்ந்த முதலாவது ஆண்டு நினைவாக திரு. P. K. வேங்கடராகவன் அவர்கள் இந்த சிவதருமத்தில் ஈடுபட்டது மிகவும் பொருத்தமே. இறைவனடி சேர்ந்த மாதுஸ்ரீ ஜானகி அம்மையாரின் நினைவு அஞ்சலிக்கட்டுரையும் இந்த மாலையில் பிரசுரமாகியுள்ளது. வேறுவகையிலும் திரு. வேங்கடராகவன் அவர்கள் தமது அன்னையாரின் நினைவு அஞ்சலியைச் செய்திருக்கக் கூடுமாயினும், நமது தமிழ் மாலைக்கு உதவ வேண்டும் என்ற எண்ணமே மேலோங்கி நமக்கு இந்த நன் கொடையினை வழங்கியதற்கு நமது மனப்பூர்வமான நன்றி களைத் திரு. வேங்கடராகவன் அவர்களுக்கும் அவரது குடும்பத்தினருக்கும் தெரிவித்துக் கொள்கிரும்,

பதினேழாவது தமிழ்மாலை வெளியீடு செலவு முழுமையும் மேற்கொண்டு உதவினவர் நமது அரியநண்பர் கலயம்புத்தூர் சைவத்திருவாளர் திரு. R. C. கதிர்வேல் அவர்களாவர். இந்தப் பதினெட்டாவது தமிழ்மாலைக்கு ரூபாய் 250/=(16 பக்கங்கள் அச்சிடும் செலவு) திரு. P. K. வேங்கடராகவன் அவர்கள் உதவியுள்ளார்கள்.

"ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாஞ் செயல்" (திருக்குறள்—33)

என்ற திருவள்ளுவரின் பொய்யாமொழிப்படி மேலும் பல அன்பர்கள் நமது சிவஞானபூசைப்பணிக்கு உதவ முன் வருவார்களேயாயின், இப்பணி விரைவில் முடியும் என்பது உறுதி. "முன்னவனே முன்னின்ருல் முடியாததும் உளதோ" என்ற தெய்வச் சேக்கிழார் பெருமானின் வாக்கினைத் தாரக மாகக் கொண்டு முன்னவன் அருளையே எதிர்நோக்கி நிற்கின்ருேம்.

பாலருவாயர் பகர்ந்தருளிய இத்தெய்வப் பனுவல்களைப் பாரிலுள்ளோர் படித்துப் பேரின்பப் பெருவாழ்வு பெற வேண்டும் என்பதே எமது பிரார்த்தனை.

சிவம்

---

## சிவஞான பூஜாமலர்: 1984-85

சென்ற மூன்று ஆண்டுகள் போலவே இவ்வருடமும் சிவபரத்துவக் கட்டுரைகளையும், வடமொழி–தமிழ் மொழியில் உள்ள சில தோத்திரங்களை உரையுடனும் தாங்கி சிவஞான பூஜரமலர் பிரசுரிக்கப்படும். சென்ற மூன்று ஆண்டு மலர்களை யும் ஆதரித்தது போலவே இவ்வாண்டு மலருக்கும் தங்களது நன்கொடைகளை வாரிவழங்கியருளுமாறு கோருகிறேன்.

இங்ஙனம்

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா,
5, டெலிபோஸ்டு காலனி குறுக்குத் தெரு
மேலமாம்பலம், சென்னை-600 033

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்



மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை-18

## திருஞானசம்பந்தர் அருளியவை

(தொடர்ச்சி)

## திருச்சக்கரமாற்று

பதிகவரலாறு:-திருஞானசம்பந்தப் பெருமானுர் சீகாழியில் பாடியருளிய, வரலாறும் காலமும் தெரியாத, பதிகங்களுள் சித்திரக்கவிகள் என்னும் மிறைக்கவிகளுள் சிலவற்றைச் சென்ற தமிழ்மாலையில் பிரசுரித்தோம். தொடர்ந்து பிரசுரிக்கப் படும் சித்திரக்கவிகளுள் திருச்சக்கரமாற்று என்னும் இதுவும் ஒன்ருகும்.

இப்பதிகத்திலுள்ள பன்னிரு திருப்பாடல்களும் சீகாழிப் பதிக்குரிய பன்னிரு திருப்பெயர்களால் முன்னும் பின்னும் உள்ள திருப்பாடல்களுடன் இணைந்து ஒரு வட்டமாக அமைந்து செல்லுதலால் இப்பதிகம் 'சக்கரம்' என்னும் பெயருடையதாயிற்று. இப்பெயர் ஆளுடையபிள்ளையாரா லேயே இடப்பெற்றது என்பது ''அயனூர் மேல் இச்சக்கரம் சீர்த்தமிழ் விரகன் தான் சொன்ன தமிழ் தரிப்போர் தவஞ் செய்தோரே'' எனவரும் இதன் திருக்கடைக்காப்பால் இனிது விளங்கும். பிற்காலத்தார் இதனைச் சக்கரமாற்று எனக்குறித் தனர். (திரு. க. வெள்ளைவாரணனாரின் 'பன்னிரு திருமுறை வரலாறு' முதற்பகுதி - பக்கம் : 651)

திருச்சக்கரமாற்று என்னும் மிறைக்கவியாகிய மதுரையில் பிள்ளையார் பாடியருளிய மற்றொரு திருப்பதிகமும் உள்ளது. அது உரிய காலத்தில் பிரசுரிக்கப்படும்.

பண்–காந்தாரம்] திருச்சிற்றம்பலம் [2-ம் திருமுறை

விள்ங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம்
புகலிவெங் குருமேற்சோலை
வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய்
சிரபுரம்வண் புறவமண்மேல்
களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயங்
கொச்சைகழு மலமென்றின்ன
இளங்குமரன் தன்னைப்பெற் றிமையவர்தம்
பகையெறிவித் திறைவனூரே. 1.

பதிகப்பொழிப்புரை : 1. பெருமை பொருந்திய பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, மேற்சோலை வளங்கவரும் தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், வளமைமிக்க புறவம், நில வுலகத்தில் களங்கமில்லாத ஊராகிய சண்பை, மணம் பரவு தலையுடைய சீகாழி, கொச்சைவயம், கழுமலம் என்றிவ்வாறு (பன்னிரண்டு பெயர்களையுடையது) முருகக்கடவுளைத் தோற்று வித்து அவரால் தேவர்களது பகைவர்களாகிய அசுரர்களை அழியச்செய்த இறைவனாகிய சிவபிரானது ஊராகும்.

ஒவ்வொரு திருப்பெயரின் முன்னும் 'திரு' என்ற சொல்லைச் சேர்த்துக்கொள்ளவும். உதாரணம்: திருப்பிரம புரம், திருவேணுபுரம். பின்னால் வரும் எல்லாப் பாடல்களில் வரும் பெயர்களுக்கும் இவ்வாறே கொள்க.

மேற்சோலை வளங்கவரும் தோணிபுரம் — மேற்சோலை என்பது மேலுலகமாகிய தேவலோகத்துச் சோலைகளைக் குறிக்கும். எனவே தேவருலகத்துச் சோலைகளின் வளத்தையும் கீழ்ப்படுத்தும் வளமுடைய சோலைகள் நிறைந்த தோணிபுரம் என்பது கருத்தாகக் கொள்க.

களங்கமில் ஊர் என்பதற்கு களங்கத்தை இல்லையாகச் செய்யும் ஊர் என்றும் கொள்ளலாம்.

இளங்குமரன்— பாலசுப்பிரமணியன்; பகை — சூரபத்மன் சிங்கமுகன், தாரகன் என்னும் அசுரர் மூவரும் அவர்களைச் சேர்ந்த அசுரர் கூட்டமும். இதன் விரிவு கந்தபுராணத்தில் காண்க.

எறிவித்த — எறியச்செய்த, அடித்தல், முரித்தல், வீசுதல் போன்ற பொருள்களைத்தரும் இச்சொல் இங்கு அழித்தல் பொருளின் மேல் நின்றது.

திருவளருங் கழுமலமே கொச்சை
தேவேந்திரனூர் அயனூர்தெய்வத்
தருவளரும் பொழிற்புறவஞ் சிலம்பனூர்
காழிதகு சண்பையொண்பா
உருவளர்வெங் குருப்புகலி யோங்குதராய்
தோணிபுரம் உயர்ந்ததேவர்
வெருவவளர் கடல்விடம துண்டணிகொள்
கண்டத்தோன் விரும்புமூரே. 2.

2. செல்வம் (அல்லது அழகு) மிக்கு வளர்தலையுடைய கழுமலம், கொச்சைவயம், வேணுபுரம், பிரமபுரம், தெய்வத் தன்மையுடைய மரங்கள் வளருகின்ற பொழில்களையுடைய

புறவம், சிரபுரம், சீகாழி, தகுதியுடைய சண்பை, அறிவொளி மிக்க இசைப்பாடல்கள் வளர்தலையுடைய வெங்குரு, புகலி, ஓங்குதலையுடைய பூந்தராய், தோணிபுரம் (என்றிவ்வாறு பெயர்கள் கொண்ட ஊரே) உயர்ந்த தேவர்கள் அஞ்சி அலறும்படி மிக்குக் கிளம்பிய கடல் விடத்தையுண்டு அதை அணியாகக் கொண்ட கழுத்தையுடையவனான சிவபிரான் விரும்பும் ஊராகும்.

திரு — செல்வம், அழகு, கண்டோரால் விரும்பப்படும் தன்மை நோக்கம், சிறப்பு, இலக்குமி. இப்பொருள்கள் அனைத்தும் இங்குப் பொருந்துதல் காண்க. மற்றும் தெய்வத் துடன் தொடர்பு கொண்ட எல்லாவற்றுக்கும் திரு அடை மொழியாதலும் காண்க. உதாரணம்: திருத்தலம், திருக் குளம், திருக்கோயில், திருவுருவம், திருவடி, திருமதில், திரு வலகு, திருவிளக்கு, திருப்பாடல் போன்றவழக்குகள் காண்க.

தேவேந்திரனூர் — திருவேணுபுரம் என்ற பெயரைக் குறித்தது. மேல்வருமிடங்களிலெல்லாம் இவ்வாறே கொள்க.

சிலம்பனூர் — சிலம்பன் என்னும் அசுரனது சிரம் (தலை) பூசித்தமையால் சீகாழிக்குச் சிரபுரம் என்ற பெயர் உண்டா யிற்று. இச்சிரமே இராகு என்னும் கோள் ஆயிற்று. சிலம் பனூர் அல்லது சிலம்பனுடன் தொடர்பு குறிக்கும் பெயர் வரு மிடங்களிலெல்லாம் சிரபுரம் என்று கொள்க.

உயர்ந்ததேவர் — திருமால், பிரமன், இந்திரன் போன்று உயர்ந்தவர் என்று கருதப்படும் தலைமைத் தேவர்கள் உள்பட முப்பத்துமுக்கோடி தேவர்களையும் குறித்தது. இவர்கள் அனைவரும் கடல்விடங் கண்டு அஞ்சியலறி ஓட, தேவதேவ னும் மஹாதேவனுமான சிவபிரான் அந்த விடத்தினைத் தமது கண்டத்தில் அழகு பெற நிறுத்தி, அஞ்சிய தேவர்களைக் காத்தருளினர் என்பது புராணப்பிரஸித்தமான வரலாறு. இதனால் இறைவன் நீலகண்டன் என்ற பெயர் பெற்றான் என்க.

வெருவுதல் — நடுங்குதல், அஞ்சியலறுதல்.

வாய்ந்தபுகழ் மறைவளருந் தோணிபுரம்
பூந்தராய் சிலம்பன்வாழூர்
ஏய்ந்தபுற வந்திகழுஞ் சண்பையெழில்
காழியிறை கொச்சையம்பொன்
வேய்ந்தமதிற் கழுமலம்விண் ணோர்பணிய
மிக்கயனூர் அமரர்கோனூர்
ஆய்ந்தகலை யார்புகலி வெங்குருவ
தரன்நாளும் அமருமூரே. 3.

3. புகழ்வாய்ந்த வேதங்கள் வளர்தலையுடைய தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், விளக்கமுடைய சண்பை, அழகிய சீகாழி, தலைமைத் தன்மையுடைய கொச்சைவயம், அழகிய பொன்வேய்ந்த மதில்களையுடைய கழுமலம், தேவர்கள் பணிதலால் பெருமை மிக்க பிரமபுரம், வேணுபுரம், கலைகளை ஆய்ந்தவர்கள் வாழும் புகலி, வெங்குரு (என்று இன்ன பெயர்களுடையது) சிவபிரான் விரும்பி எழுந்தருளிய ஊராகும்.

மாமலையாள் கணவன்மகிழ் வெங்குருமாப்
புகலிதராய் தோணிபுரம்வான்
சேமமதில் புடைதிகழுங் கழுமலமே
கொச்சைதேவேந் திரனூர்சீர்ப்
பூமகனூர் பொலிவுடைய புறவம்விறற்
சிலம்பனூர் காழிசண்பை
பாமருவு கலையெட்டெட் டுணர்ந்தவற்றின்
பயனுகர்வோர் பரவுமூரே. 4.

4. இமயமலையரசன் மகளான பார்வதி தேவியார் மணாளனான சிவபிரான் மகிழ்ந்த வெங்குரு, பெருமையுடைய புகலி, பூந்தராய், தோணிபுரம், காவலாக அமைந்த வானளாவ உயர்ந்த மதில்கள் புடைசூழ்ந்த கழுமலம், கொச்சைவயம், வேணுபுரம், பெருமையுடைய பிரமபுரம், விளக்கமுடைய புறவம், சிரபுரம், சீகாழி, சண்பை (என்றின்ன

பெயர்களுடையது), பாக்கள் பொருந்திய அறுபத்துநான்கு கலைகளையும் கற்று அவற்றின் பயனை அனுபவிக்கும் அறிஞர் கள் துதித்துப் பரவுகின்ற சிவபெருமானது ஊராகும்.

பூமகன் — பிரமதேவன், அவன் ஊர் பிரமபுரம்.

எட்டெட்டுக்கலைகளையுமுணர்ந்து அவற்றின் பயன் நுகர் தலாவது, அக்கலைகள் மூலம் முழுமுதற்கடவுள் சிவபெரு மானே என்றும், பிறவாப்பேரின்பம் அளிக்கவல்லபிரான் அவனேயென்றும் தெளிந்து அப்பெருமானை வழிபட்டு இன்புறுதலாம்.

தரைத்தேவர் பணிசண்பை தமிழ்க்காழி
வயங்கொச்சை தயங்குபூமேல்
விரைச்சேருங் கழுமலமெய் யுணர்ந்தயனூர்
விண்ணவர்தங் கோனூர்வென்றித்
திரைச்சேரும் புனற்புகலி வெங்குருச்
செல்வம்பெருகு தோணிபுரஞ்சீர்
உரைச்சேர்பூந் தராய்சிலம்ப னூர்புறவம்
உலகத்தி லுயர்ந்தவூரே. 5.

5. பூவுலகில் தேவர்களைப்போன்ற அந்தணர்கள் பணி கின்ற சண்பை, தமிழ் வளர்கின்ற சீகாழி, கொச்சைவயம், அசைதலையுடைய பூக்களில் மணம் சேருகின்ற கழுமலம், சிவ பிரானே முழுமுதல் என்ற உண்மையை உணர்ந்த பிரமனது ஊர் (பிரமபுரம்), வேணுபுரம், வெற்றியுடைய அலைகள் சேரு கின்ற நீர்ப்பெருக்கையுடைய புகலி, வெங்குரு, நாளுக்கு நாள் செல்வம் பெருகுதலையுடைய தோணிபுரம், புகழ்மொழி கள் சேருகின்ற பூந்தராய், சிரபுரம், புறவம்(என்றின்ன பெயர் கள் உடையது) உலகத்தில் உயர்ந்த (பெருமானது) ஊராகும்.

புண்டரிகத் தார்வயல்சூழ் புறவமிகு
சிரபுரம்பூங் காழிசண்பை
எண்டிசையோ ரிறைஞ்சியவெங் குருப்புகலி
பூந்தராய் தோணிபுரஞ்சீர்

வண்டமரும் பொழில்மல்கு கழுமலநற்
கொச்சைவா னவர்தங்கோனூர்
அண்டயனூ ரிவையென்ப ருங்கூற்றை
உதைத்துகந்த அப்பனூரே. 6.

6. தாமரைமலர்கள் நிறைந்த கழனிகள் சூழ்ந்த புறவம், சிரபுரம், அழகுடைய சீகாழி, சண்பை, எட்டுத்திசைகளில் உள்ளவர்களும் சென்று வணங்கிய சிறப்புடைய வெங்குரு, புகலி, பூந்தராய், தோணிபுரம், அழகிய வண்டுகள் அமருகின்ற பூக்களையுடைய பொழில்கள் நிறைந்த கழுமலம், நன்மையுடைய கொச்சைவயம், வேணுபுரம், இறைவனைச் சரணாகவந்தடைந்த பிரமனது ஊர் (பிரமபுரம்) (என்றின்ன பெயர்களையுடையது) இயமனை உதைத்த காலஸம்ஹார மூர்த்தியான சிவபெருமானது ஊர் என்று (பெரியோர்) கூறுவர்.

வண்மைவளர் வரத்தயனூர் வானவர்தங்
கோனூர்வண் புகலியிஞ்சி
வெண்மதிசேர் வெங்குருமிக் கோரிறைஞ்சு
சண்பைவியன் காழிகொச்சை
கண்மகிழுங் கழுமலங்கற் றோர்புகழுந்
தோணிபுரம் பூந்தராய்சீர்ப்
பண்மலியுஞ் சிரபுரம்பார் புகழ்புறவம்
பால்வண்ணன் பயிலுமூரே. 7.

7. வண்மை வளர்தலையுடையதும் மேன்மையுடைதுமான பிரமபுரம், வேணுபுரம், வளமையுடைய புகலி, வெண்மையான நிலவொளி வீசும் சந்திரனைத் தொடுமளவுக்கு உயர்ந்த மதில்களையுடைய வெங்குரு, உயர்ந்தவர்கள் இறைஞ்சுகின்ற சண்பை, பெருமையுடைய சீகாழி, கொச்சை வயம், காண்டலாற் கண்கள் களிப்படையும் கழுமலம், கற்றவர்கள் புகழும் தோணிபுரம், பூந்தராய், பெருமையுடைய இசைப்பாடல்கள் மிகுந்த சிரபுரம், உலகம் புகழும் புறவம்

(என்றின்ன பெயர்கள் உடையது) பால் வண்ணனாகிய சிவ பிரான் பழகுதலையுடைய ஊராகும்.

வண்மை — கொடை, உண்மை, வளமை, புகழ், வலிமை என்ற பொருள்கள். எனவே இவைகள் ஒவ்வொன்றும் வளர் தலையுடைய ஊர் எனக் கொள்க. வரம்—மேன்மை; இஞ்சி—மதில்.

மிக்கோர் — உயர்ந்தவர். அதாவது கல்வி, கேள்வி, ஞானம், ஈகை, செந்தண்மை, தவம், தொண்டு, சிவபூசை முதலியவற்றால் உயர்ந்தவர்கள் என்பதாம்.

பண்மலியும் சிரபுரம் — 'பண்' என்பது இசைப்பாட்டைக் குறிக்கும். முன் 2-வது திருப்பாடலில் 'ஒண்பா உருவளர் வெங்குரு' என்றருளிச் செய்ததுங் காண்க.

மோடிபுறங் காக்குமூர் புறவஞ்சீர்ச்
சிலம்பனூர் காழிமூதூர்
நீடியலுஞ் சண்பைகழு மலங்கொச்சை
வேணுபுரங் கமலநீடு
கூடியய னூர்வளர்வெங் குருப்புகலி
தராய்தோணி புரங்கூடப்போர்
தேடியுழல் அவுணர்பயில் திரிபுரங்கள்
செற்றமலைச் சிலையனூரே. 8.

8. துர்க்கை காவல்புரியும் ஊராகிய புறவம், அழகிய சிரபுரம், பழமையான ஊராகிய சீகாழி, நீண்ட காலமாக நிலைத்தலைப் பொருந்திய சண்பை, கழுமலம், கொச்சைவயம் வேணுபுரம், தாமரையில் வாழும் பிரமனது ஊர் (பிரமபுரம்) நாள்தோறும் வளர்தலையுடைய வெங்குரு, புகலி, பூந்தராய், திருத்தோணிபுரம் (என்றின்ன பெயர்களுடையது), போரினைத் தேடித்திரியும் அசுரர்கள் பயிலுகின்ற முப்புரங்களையும் அழித்த மலையை வில்லாகவுடையவனுடைய ஊராகும்.

மோடி — துர்க்கை; மலைசிலையன் - மேருமலையை வில்லாக உடையவன். திரிபுர ஸம்ஹார காலத்தில் மேருமலை சிவ பிரானுக்கு வில்லாக அமைந்தது. வாசுகி நாண்கயிருகவும் திருமால் அம்பாகவும் அமைந்தனர்.

இரக்கமுடை யிறையவனூர் தோணிபுரம்
பூந்தராய் சிலம்பன்றன்னூர்
நிரக்கவரு புனற்புறவ நின்றதவத்
தயனூர்சீர்த் தேவர்கோனூர்
வரக்கரவாப் புகலிவெங் குருமாசி
லாச்சண்பை காழிகொச்சை
அரக்கன்விற லழித்தருளி கழுமலமந்
தணர்வேத மருதவூரே. 9.

9. தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், விரைந்து வரும் நீரையுடைய புறவம், பிரமபுரம், பெருமையுடைய வேணுபுரம் வரங்கள் அருள்வதை என்றும் மறைக்காத புகலி, வெங்குரு, குற்றமற்ற சண்பை, சீகாழி, கொச்சைவயம், இராவணனது வலியழித்தவனாகிய சிவபிரானது கழுமலம் (என்றின்ன பெயர்களுடையது) அந்தணர் வேதம் ஓதுதல் நீங்காததும், இரக்கமே உருவான சிவபிரானதுமான ஊராகும்.

வரக்கரவாப் புகலி — வரங்கரவாப் புகலி என்று கொண்டு பொருள் உரைக்கப்பட்டது. எதுகை நோக்கி 'ங' கர ஒற்று 'க' கர ஒற்றாகத் திரிந்தது.

அரக்கன் — இங்கு இராவணன்; அருளி — இங்கு எச்சமன்று. 'இ'கரவீற்றுப் பெயர்ச்சொல். அருளியவன் அதாவது சிவபிரான் என்பது பொருள்.

மேலோதுங் கழுமலமெய்த் தவம்வளருங்
கொச்சையிந் திரனூர்மெய்ம்மை
நூலோது மயன்றனூர் நுண்ணறிவார்
குருப்புகலி தராய்தூநீர்மேல்

சேலோடு தோணிபுரந் திகழ்புறவஞ்
சிலம்பனூர் செருச்செய்தன்று
மாலோடு மயனறியான் வண்காழி
சண்பைமண்ணோர் வாழ்த்துமூரே. 10.

10. உயர்ந்தவர்கள் போற்றும் கழுமலம், உண்மையான தவம் வளருகின்ற கொச்சைவயம், வேணுபுரம், மெய்ப்பொருளான சிவபெருமானை உணர்த்தும் உண்மைநூல்களாகிய வேதங்களை ஓதுகின்ற பிரமனது ஊராகிய பிரமபுரம், நுண்ணறிவு பொருந்தியவர்கள் வாழும் வெங்குரு, புகலி, பூந்தராய், நீரின்மேல் மீனினம் ஓடுகின்ற தோணிபுரம், விளக்கமுடைய புறவம், சிரபுரம், தங்களுக்குள் போர் செய்த நாளன்று திருமாலோடு பிரமதேவனும் அறியமுடியாதவனாகிய சிவபிரானது சீகாழி, சண்பை (என்றின்ன பெயர்களுடையது) மண்ணுலகத்தினர் வாழ்த்துகின்ற ஊராகும்.

ஆக்கமர்சீ ரூர்சண்பை காழியமர்
கொச்சைகழு மலமன்பானூர்
ஒக்கமுடைத் தோணிபுரம் பூந்தராய்
சிரபுரமொண் புறவநண்பார்
பூக்கமலத் தோன்மகிழூர் புரந்தரனூர்
புகலிவெங் குருவுமென்பர்
சாக்கியரோ டமண்கையர் தாமறியா
வகைநின்றான் தங்குமூரே. 11.

11. செல்வம் மிக்க பெருமையுடைய ஊராகிய சண்பை, சீகாழி, கொச்சைவயம், கழுமலம், அன்புருவான சிவபிரானது ஊராகிய உயர்ச்சியுடைய தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், ஒளிமிக்க புறவம், நட்புணர்ச்சி பொருந்திய பிரமதேவன் மகிழும் ஊர் (பிரமபுரம்), வேணுபுரம், புகலி, வெங்குரு (என்றின்ன பெயர்களுடையது), பௌத்தர்களும் சமணர்களுமாகிய கீழ்மக்கள் அறியாதவகை நின்றவனாகிய சிவபிரானது ஊராகும் என்று பெரியோர் கூறுவர்.

நண்பு — இங்குப் பக்தியைக் குறித்தது.

அக்கரஞ்சேர் தருமனூர் புகலிதராய்
தோணிபுர மணிநீர்ப்பொய்கை
புக்கரஞ்சேர் புறவஞ்சீர்ச் சிலம்பனூர்
புகழ்க்காழி சண்பைதொல்லூர்
மிக்கரஞ்சீர்க் கழுமலமே கொச்சைவயம்
வேணுபுர மயனூர்மேலிச்
சக்கரஞ்சீர்த் தமிழ்விரகன் தான்சொன்ன
தமிழ்தரிப்போர் தவஞ்செய்தோரே. 12.

திருச்சிற்றம்பலம்

12. அழிவின்மையுடைய தருமனூராகிய வெங்குரு, புகலி, பூந்தராய், தோணிபுரம், அழகிய நீர்ப்பொய்கையாம் புண்ணிய தீர்த்தம் உடைய புறவம், சிரபுரம், புகழுடைய சீகாழி, தொன்மையான ஊராகிய சண்பை, அரனது பெருமை மிகுதியாக உள்ள கழுமலம், கொச்சைவயம், வேணுபுரம், பிரமபுரம், (என்றின்ன பெயர்களுடைய) இத்தலத்தின் மேல் சக்கரம் என்ற அமைப்புடையதும், பெருமையுடைய திருஞான சம்பந்தன் கூறியருளியதுமான இத்தமிழ்ப்பதிகத்தை (அன்புடன் தங்கள் நாவிலும் உள்ளத்திலும்) தரிப்பவர்கள் சிறந்த தவத்தைச் செய்தவர்கள் ஆவர்.

அக்கரம் — அக்ஷரம்; க்ஷரம் — அழிவு, அது இல்லாதது அக்ஷரம் என்க.

தருமன் — இயமன். இவன் வழிபட்டதாலும் சீகாழிக்கு வெங்குரு என்ற பெயர் உண்டானதாகத் தலபுராணங் கூறுகிறது.

புக்கரம் — புஷ்கரம் (புண்ணிய தீர்த்தம்)

மிக்கரஞ்சீர் — அரன் சீர் மிக்க என மாற்றிப் பிரித்துப் பொருள் கொள்ளப்பட்டது.

சக்கரம் — சித்திரக்கவிகளுள் ஒன்றான சக்கரமாற்று என்ற யாப்பமைதியைக் குறித்தவாறு.

தமிழ்விரகன் — திருஞானசம்பந்தன்.

சிவம்

௰.

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருக்கோமூத்திரி

பதிகவரலாறு : சீகாழிப்பதியில் மூல இலக்கியமாகப் பாடியருளிய மிறைக்கவிகள் என்னும் சித்திரக்கவிகளுள் திருக்கோமூத்திரி என்னும் இப்பதிகமும் ஒன்ருகும்.

கோமூத்திரியாவது ஒரு செய்யுளின் முன்னிரண்டு அடிகளை மேல்வரியாகவும் பினனிரண்டடிகளைக் கீழ்வரியாகவும் வரைந்து, அவ்விரண்டு வரிகளின் எழுத்துக்களை மேலுங் கீழுமாக ஒன்றிடையிட்டு வாசித்தாலும் அதே செய்யுளாய் அமையும் சித்திரக்கவியாகும். இதன்கண் மேலுங்கீழும் அமைந்த எழுத்துக்கள் கோமூத்ரரேகைபோல் ஒன்றிடையிட்டு வாசிக்கப்பெறுதலின் கோமூத்திரி எனப்பட்டது. (பசுவானது நடந்து கொண்டே நீர் விடும் போது அந்நீர் ஒழுகிய தாரையானது இவ்வாறே தெளிந்த வடிவமாக இருக்கும். இதனுல் கோமூத்திரி எனப்பெயா ஏற்பட்டது). ஆனுல் இந்த கோமூத்திரி என்ற பாடல் அமைப்பு இந்தப் பதிகத்தில் இருப்பதாகப் புலப்படவில்லை. இப்பதிகத்துக்குப் பிள்ளையார் இட்டபெயர் கோமூத்திரி என்பதன்று. இறுதிப் பாடலில் குறிப்பிட்டருளிய வண்ணம் வழிமுடக்குமாவின் பாச்சல் என்பதே இப்பதிகப் பெயராம். இபபெயர்க்காரணம் நன்கு புலப்படவல்லை. இப்பதிகப்பாடல் ஒவ்வொன்றிலும் பிரமபுரத்திற்குரிய பன்னிரு திருப்பெயர்களும் எண்ணப் பெற்றுள்ளன. ஒரு பாடலின் இறுதியில் வைத்தெண்ணப் பெற்ற பெயர் அடுத்தபாடற்கு முதலாக மீண்டும் மடித் தெண்ணப்பெறும் நிலையிலமைந்த இப்பதிகம், முடக்காக வளைந்த வழியே சென்ற மாவானது (அல்லது ஆவானது)

மீண்டும் வந்த வழியே மடங்கிச் சென்றாற்போலும் நடை அமைப்பினையுடையதாதல் இங்கு நோக்கத்தகுவதாகும். (தண்டியலங்காரம் பக்கம் 223, 224, 225ல் உள்ளவற்றையும் திருமுறைக்கலைஞர் க. வெள்ளைவாரணனாரின் 'பன்னிரு திரு முறை வரலாறு, முதற்பகுதி, பக்கம் 652 ல் உள்ளவற்றையும் தழுவி இக்குறிப்புகள் இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன)

தேவாரப்பதிப்புகள் அனைத்திலும் இப்பதிகம் 'கோமூத்திரி' என்று பதிப்பிக்கப்பட்டிருத்தலால், நாமும் இப்பெயரையே கொடுத்துள்ளோம்.

பண்—காந்தாரம்] திருச்சிற்றம்பலம் [2-ம் திருமுறை

பூமகனூர் புத்தேளுக் கிறைவனூர்
குறைவிலாப் புகலிபூமேல்
மாமகளூர் வெங்குருநற் றோணிபுரம்
பூந்தராய் வாய்ந்தவிஞ்சிச்
சேமமிகு சிரபுரஞ்சீர்ப் புறவநிறை
புகழ்ச்சண்பை காழிகொச்சை
காமனைமுன் காய்ந்தநுதற் கண்ணவனூர்
கழுமலநாங் கருதுமூரே 1

பதிகப்பொழிப்புரை: 1. பிரமபுரம், வேணுபுரம், எவ்வித மான குறைகளும் இல்லாத புகலி, மலர்மேல் உறையும் திருமகள் வாழும் அல்லது பரவும் ஊராகிய வெங்குரு, நன்மை உடைய தோணிபுரம், பூந்தராய், மதில்களாகிய காவல்மிக்கு அமைந்த சிரபுரம், பெருமையுடைய புறவம், நிறைந்த புகழை உடைய சண்பை, சீகாழி, கொச்சைவயம், மன்மதனை முன்னர்க் கோபித்த (எரித்த) நெற்றிக்கண்ணனது ஊராகிய கழுமலம் (என்று இப்பெயர்களையுடைய தலமே) நாம் கருது கின்ற ஊராகும்.

புத்தேளுக்கிறைவன் — இந்திரன், இவனது ஊர் என்று குறிப்பிட்டது வேணுபுரம் என்ற திருப்பெயரையாகும்.

இந்திரனைக் குறிக்கும் சொற்களைத் தொடர்புபடுத்தி மேல் வருமிடங்களிலெல்லாம் இவ்வாறே கொள்க.

இத்திருப்பாடலிலும் இனி வரும் திருப்பாடல்களிலும் ஒவ்வொரு பெயரின் முன்னும் 'திரு' என்ற சொல்லைச் சேர்த்துக் கொள்க. முன் பதிக உரையில் கூறியவற்றையும் இங்குக் கொள்க.

கருதுதல் — உயர்ந்த தலமாக எண்ணுதல், அல்லது தியானித்தல் என்றும் பொருள் கொள்ளலாம்.

கருத்துடைய மறையவர்சேர் கழுமலமெய்த்
    தோணிபுரங் கனகமாட
உருத்திகழ்வெங் குருப்புகலி யோங்குதராய்
    உலகாருங் கொச்சைகாழி
திருத்திகழுஞ் சிரபுரந்தே வேந்திரனூர்
    செங்கமலத் தயனூர்தெய்வத்
தருத்திகழும் பொழிற்புறவஞ் சண்பைசடை
    முடியண்ணல் தங்குமூரே. 2

2. நல்ல கருத்துக்களையுடைய மறையவர்கள் வாழுகின்ற கழுமலம், உண்மைப் பொருள் விளங்கும் தோணிபுரம், பொன் மாடங்களின் உருவங்கள் திகழ்கின்ற வெங்குரு, புகலி, ஓங்குதலையுடைய பூந்தராய், உயர்ந்தோர் வந்து தங்கும் (அல்லது நிறையும்) கொச்சைவயம், சீகாழி, அழகு விளங்கும் சிரபுரம், வேணுபுரம், பிரமபுரம், கற்பகம் முதலிய விருக்ஷங்கள் விளங்குகின்ற பொழில்களையுடைய புறவம், சண்பை (என்றின்ன பெயர்கள் கொண்ட தலமே), சடைமுடி தரித்த சிவபெருமான் தங்குகின்ற ஊராகும்.

கருத்துடை மறையவர் — வேதங்கள் மற்றும் கலைகளின் கருத்துக்களை நன்குணர்ந்த மறையவர்கள்.

உலகு—'உலகு' என்னுஞ் சொல் இங்கு உயர்ந்தோரைக் குறித்தது.

ஆர்தல் — நிறைதல், தங்குதல், பொருந்துதல்.
திகழ்தல் — விளங்குதல், பிரகாசித்தல்.
தெய்வத்தரு — கற்பகவிருக்ஷம் போன்ற தேவருலக மரங்கள்.

ஊர்மதியைக் கதுவவுயர் மதிற்சண்பை
ஒளிமருவு காழிகொச்சை
கார்மலியும் பொழில்புடைசூழ் கழுமலமெய்த்
தோணிபுரங் கற்றோரேத்தும்
சீர்மருவு பூந்தராய் சிரபுரமெய்ப்
புறவமய னூர்பூங்கற்பத்
தார்மருவு மிந்திரனூர் புகலிவெங்
குருக்கங்கை தரித்தோனூரே. 3

3. ஆகாயத்திலே ஊர்ந்து செல்லும் சந்திரனைப் பற்றுமளவுக்கு உயர்ந்தமதில்களையுடைய சண்பை, ஒளிபொருந்திய சீகாழி, கொச்சைவயம், (மரங்களின் அடர்த்தியால்) இருள் மிகுதியாகின்ற பொழில்கள் புடைசூழ்ந்த கழுமலம், உண்மைப் பொருளாம் சிவபிரான் விளங்குகின்ற தோணிபுரம், கற்றவர்கள் துதித்து வணங்குகின்ற பெருமை பொருந்திய பூந்தராய், சிரபுரம், உண்மைப் பொருள் விளங்கும் புறவம், பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, (என்றின்ன பெயர்கள் வாய்ந்த தலமே) கங்கையைத் தலையில் தரித்த சிவபிரானது ஊராகும்.

கார் — இருள், மேகம். மெய் — சத்துப்பொருள், அதாவது எக்காலத்தும் அழியாத மெய்ப்பொருள் (சிவம்). பூங்கற்பத்தார் — கற்பகப் பூமாலை. கங்கைதரித்தோன் — கங்காதரன்.

தரித்தமறை யாளர்மிகு வெங்குருசீர்த்
தோணிபுரந் தரியாரிஞ்சி
எரித்தவன்சேர் கழுமலமே கொச்சைபூந்
தராய்புகலி இமையோர்கோனூர்

தெரித்தபுகழ்ச் சிரபுரஞ்சீர் திகழ்காழி
சண்பைசெழு மறைகளெல்லாம்
விரித்தபுகழ்ப் புறவம்விரைக் கமலத்தோன்
ஊருலகில் விளங்குமூரே. 4

4. (சிவபிரானை உள்ளத்திலே) தரித்த மறைவல்லுனர்கள் மிகுதியாக வாழும் வெங்குரு, அழகியதோணிபுரம், பகைவர்களாகிய அசுரர்களது முப்புரங்களையும் எரித்தவனுடைய கழுமலம், கொச்சைவயம், பூந்தராய், புகலி, வேணுபுரம், மிகுதியான புகழுடைய சிரபுரம், பெருமை விளங்கும் சீகாழி, சண்பை, செழுமையுடைய வேதங்களெல்லாம் விரித்துரைத்த புகழ்களையுடைய (சிவபிரானது) புறவம், பிரமபுரம் (என்றின்ன பெயர்களையுடைய தலமே) இந்நிலவுலகில் உயர்ந்து விளங்கும் ஊராகும்.

தெரித்தபுகழ்-தெரித்தல் அதாவது கொழித்தல். இச்சொல் இங்கு மிகுதியைக் குறித்தது.

செழுமறை-மறைகளுக்குச் செழுமை அவற்ருல் கூறப்படும் பொருட்களின் மிகுதியினைக் குறித்தது.

விளங்கயனூர் பூந்தராய் மிகுசண்பை
வேணுபுரம் மேகமேய்க்கும்
இளங்கமுகம் பொழிற்ரேணி புரங்காழி
எழிற்புகலி புறவமேரார்
வளங்கவரும் வயற்கொச்சை வெங்குருமாச்
சிரபுரம்வன் னஞ்சமுண்டு
களங்கமலி களத்தவன் சீாக்கழுமலங்கா
மன்னுடலங் காய்ந்தோனூரே. 5

5. விளங்குதலுடைய பிரமபுரம், பூந்தராய், சண்பை, வேணுபுரம், மேகமண்டலத்தைப் பொருந்தும் இளமையான பாக்குமரச்சோலைகள் நிறைந்த தோணிபுரம், சீகாழி, அழகுடைய புகலி, புறவம், அழகு நிறைந்த வளமையால் (காண்போரது மனத்தைக்) கவரும் வயல்களையுடைய கொச்சை

வயம், வெங்குரு, பெருமையுடைய சிரபுரம், வலிய(கொடிய) விஷத்தையுண்டருளி (அதனுல்) ஒரு குற்றம் (இங்குக்கறை) மலிந்த கழுத்தையுடையவனுன சிவபிரானது புகழுடைய கழுமலம் (என்று இவ்வாறு பெயர்களுடைய தலமே) முன்மதனது உடலை எரித்தவனுகிய சிவபிரானது ஊராகும்.

மேகம் ஏய்க்கும்-மேகமண்டல அளவுக்கு உயர்தலைக் குறித்தது.

களங்கம்-குற்றம் (இங்குக் கழுத்தில் ஏற்படுத்திய கரிய நிறக் கறையைக் குறித்தது).

காய்ந்துவரு காலனையன் றுதைத்தவனூர்
கழுமலமாத் தோணிபுரஞ்சீர்
ஏய்ந்தவெங் குருப்புகலி இந்திரனூர்
இருங்கமலத் தயனூரின்பம்
வாய்ந்தபுற வந்திகழும் சிரபுரம்பூந்
தராய்கொச்சை காழிசண்பை
சேந்தனைமுன் பயந்துலகில் தேவர்கள்தம்
பகைகெடுத்தோன் திகழுமூரே. 6

6. (மார்க்கண்டேயர் மீது) கோபித்து வந்த இயமனை அன்று உதைத்தவனுகிய சிவபிரானது ஊராகிய கழுமலம், செல்வம் மிக்க தோணிபுரம், அழகு பொருந்திய வெங்குரு. புகலி, வேணுபுரம், பிரமபுரம், இன்பம் வாய்ந்த புறவம், பிரகாசித்தலையுடைய சிரபுரம், பூந்தராய், கொச்சைவயம். சீகாழி, சண்பை (என்றிவ்வாறு பெயர்கள் கொண்டதலமே) முருகப்பெருமானைப் பெற்று தேவர்களுடைய பகைவர் களாகிய அசுரர்களை அழித்த சிவபிரான் விளக்கமுடன் வீற்றிருக்கின்ற ஊராகும்,

சேந்தன்-முருகன். (முன்பதிகம் முதல் பாடல் உரையையும் இங்குக் கொள்க).

மார்க்கண்டேயருக்காக இயமனை உதைத்த வரலாறு, மிகவும் பிரசித்தமானதே. கந்தபுராணம், அசுரகாண்டம், மார்க்கண்டேயப் படலம் இவ்வரலாற்றை விரிவாகக் கூறும்.

திகழ்மாட மலிசண்பை பூந்தராய்
பிரமனூர் காழிதேசார்
மிகுதோணி புரந்திகழும் வேணுபுரம்
வயங்கொச்சை புறவம்விண்ணோர்
புகழ்புகலி கழுமலஞ்சீர்ச் சிரபுரம்வெங்
குருவெம்போர் மகிடற்செற்று
நிகழ்நீலி நின்மலன்றன் னடியிணைகள்
பணிந்துலகில் நின்றவூரே. 7

7. ஒளிமிக்க மாடங்கள் மிகுந்த சண்பை, பூந்தராய், பிரமபுரம், காழி, மிக்கு ஒளி பொருந்திய தோணிபுரம், விளங்கும் வேணுபுரம், கொச்சைவயம், புறவம், தேவர்கள் துதிக்கின்ற புகலி, கழுமலம், பெருமையுடைய சிரபுரம், வெங்குரு (என்று இன்ன பெயர்கள் கொண்ட தலமே) மகிடாசுரனைக் கொன்று துர்க்கையானவள் நின்மலனாகிய சிவபிரானைப் பணிந்து உலகில் நிலைத்த புகழுடன் நின்ற வூராகும்.

மகிடாசுரனை துர்க்கை கொன்ற வரலாறு தேவீபாகவதம், தேவீமாஹாத்மியம், ஸ்காந்தபுராணம் உபதேசகாண்டம் முதலியவற்றில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

நின்றமதில் சூழ்தருவெங் குருத்தோணி
புரநிகழும் வேணுமன்றில்
ஒன்றுகழு மலங்கொச்சை யுயர்காழி
சண்பைவளர் புறவமோடி
சென்றுபுறங் காக்குமூர் சிரபுரம்பூந்
தராய்புகலி தேவர்கோனூர்
வென்றிமலி பிரமபுரம் பூதங்கள்
தாங்காக்க மிக்கவூரே. 8

8. நிலையாக நின்ற மதில்கள் சூழ்ந்த வெங்குரு, தோணி புரம், ஒளி செய்யும் வேணுபுரம், (இறைவனுடன்) பொருந்து தலையுடைய கழுமலம், கொச்சைவயம், உயர்ந்த சீகாழி, சண்பை, வளர்தலையுடைய புறவம், துர்க்கை காவல் செய்யும் ஊராகிய சிரபுரம், பூந்தராய், புகலி, வேணுபுரம், வெற்றி மிகுதியுடைய பிரமபுரம் (என்றிவ்வாறு பெயர்கள் கொண்ட தலமே) சிவபூதங்கள் தாம் எப்போதும் காவல் புரிகின்ற தன்மையால் மிகவும் சிறந்து விளங்குகின்ற ஊராகும்.

பூதங்கள் தாங்காக்க மிக்க ஊர்—பூதங்கள் தாங்கு ஆக்கம் மிக்க ஊர் என்று பிரித்துப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

மிக்ககம லத்தயனூர் விளங்குபுற
வஞ்சண்பை காழிகொச்சை
தொக்கபொழிற் கழுமலந்தூத் தோணிபுரம்
பூந்தராய் சிலம்பன்சேரூர்
மைக்கொள்பொழில் வேணுபுர மதிற்புகலி
வெங்குருவல் லரக்கன்திண்டோள்
ஒக்கவிரு பதுமுடிக ளொருபதுமீ
டழித்துகந்த எம்மானூரே. 9

9. மேன்மையுடைய பிரமபுரம், (புகழ்) விளங்குகின்ற புறவம், சண்பை, சீகாழி, கொச்சைவயம், பொழில்கள் நெருக்கமாகவுள்ள கழுமலம், தூய்மையுடைய தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், மேகங்கள் நிறைந்த பொழில்களையுடைய வேணுபுரம், மதில்களையுடைய புகலி, வெங்குரு, (என்று இன்ன பெயர்களையுடையது) கொடிய அரக்கனை இராவண னது திண்மையான தோள்கள் இருபதையும் ஒரு பத்து முடி களையும் ஒருசேர அவற்றின் வலிமையழித்து உயர்ந்த எம்மா னாகிய சிவபிரானது ஊராகும்.

மை — மேகம், கருமை. ஈடு — வலிமை, பெருமை.

எம்மான்சேர் வெங்குருச்சீர்ச் சிலம்பனூர்
கழுமலநற் புகலியென்றும்
பொய்ம்மாண்பி லோர்புறவங் கொச்சைபுரந்
தரனூர்நல் தோணிபுரம்போர்க்
கைம்மாவை யுரிசெய்தோன் காழியய
னூர்தராய் சண்பைகாரின்
மெய்ம்மால்பூ மகனுணரா வகைதழலாய்
விளங்கியவெம் மிறைவனூரே. 10

10. எம்பெருமானுடைய வெங்குரு, பெருமையுடைய சிரபுரம், கழுமலம், நன்மைமிக்க புகலி, எக்காலத்திலும் மெய்ப்புகழுடையவர்கள் வாழும் புறவம், கொச்சைவயம், வேணுபுரம், நல்ல தோணிபுரம், போர் செய்தலின் மேல் வந்த கயாசுரனாகிய யானையின்தோலை உரித்த சிவபிரானது சீகாழி, பிரமபுரம், பூந்தராய், சண்பை என்றின்ன பெயர்களை உடையது) மேகம் போலும் மேனியுடைய திருமாலும் பிரம தேவனும் அறியாத வண்ணம் தீப்பிழம்பாய்த் தோன்றிய எமது தலைவனாகிய சிவபிரானது ஊராகும்.

பொய்ம்மாண்பு — பொய்யான, அழியுந்தன்மை வாய்ந்த புகழ். அஃது இல்லாதவர்கள் உண்மையான நிலைத்த புகழுடையவர்கள் என்று கொள்க.

இறைவனமர் சண்பையெழிற் புறவமய
னூரிமையோர்க் கதிபன்சேரூர்
குறைவில்புகழ்ப் புகலிவெங் குருத்தோணி
புரங்குணமார் பூந்தராய்நீர்ச்
சிறைமலிநற் சிரபுரஞ்சீர்க் காழிவளர்
கொச்சைகழு மலந்தேசின்றிப்
பறிதலையோ டமண்கையர் சாக்கியர்கள்
பரிசறியா அம்மானூரே. 11

11. (எல்லா உலகுக்கும் உயிருக்கும்) தலைவனாகிய சிவ பிரான் விரும்பி எழுந்தருளும் சண்பை, அழகுடைய புறவம்,

பிரமபுரம், வேணுபுரம், குறைவில்லா நிறைவுடைய புகழ் மலிந்த புகலி, வெங்குரு, தோணிபுரம், குணங்கள் பொருந்திய பூந்தராய், நீரணைகள் மலிந்த நன்மையுடைய சிரபுரம், சிறப்புடைய சீகாழி, வளர்கின்ற கொச்சைவயம், கழுமலம் (என்றின்ன பெயர்களையுடையது) ஒளியின்றி, மயிர் பறித்த தலையையும் உடைநீத்த உருவினையுமுடைய சமணர்களாகிய கீழ்மக்களும், பௌத்தர்களாகிய கீழ் மக்களும் அறியாத தன்மையுடைய சிவபிரானின் ஊராகும்.

குணமார் பூந்தராய்—உயர்ந்த நகரத்துக்குரிய குணங்கள் (தன்மைகள்) நிறைந்த பூந்தராய் எனக் கொள்க.

நீர்ச்சிறை — சிறை என்ற சொல்லுக்கு தடுப்பு, காவல், நீர்க்கரை என்ற பொருள்கள் உண்மையால் நீரின் வேகத்தைத் தடுத்துத் தேக்கிவைக்கும் அணை என்று பொருள் கொண்டோம்.

தேசு — ஒளி (அழகு), ஞானஒளியுமாம். மயிர் பறித்தலால், புற ஒளியும், ஞானமின்மையால் அகவொளியும் அற்றவர்கள் சமணர்.

அமணர் — உடை நீத்த உருவத்தர் ஆகலின் சமணர்கள் அமணர் எனப்பட்டனர்.

பரிசு — சிவபிரானது மெய்த்தன்மை.

அம்மான் — சிவபிரான்.

அம்மான்சேர் கழுமலமாச் சிரபுரம்வெங்
குருக்கொச்சை புறவமஞ்சீர்
மெய்ம்மானத் தொண்புகலி மிகுகாழி
தோணிபுரந் தேவர்கோனூர்
அம்மான்மன் னுயர்சண்பை தராயயனூர்
வழிமுடக்கு மாவின் பாச்சல்
தம்மானென் றியஞான சம்பந்தன்
தமிழ்கற்போர் தக்கோர்தாமே. 12

திருச்சிற்றம்பலம்

12. சிவபிரானுடைய கழுமலம், பெரியசிரபுரம், வெங்குரு, கொச்சைவயம், புறவம், அழகும் சிறப்பும் உண்மையான பெருமையுமுடைய ஒளிமிக்க புகலி, மேன்மையுடைய சீகாழி, தோணிபுரம், வேணுபுரம், சிவபிரான் நிலையாகப் பொருந்திய உயர்ந்த சண்பை, பூந்தராய், பிரமபுரம் (என்று இவ்வாறு பன்னிரண்டு பெயர்களுடைய திருத்தலத்தை) வழிமுடக்கும் மாவின் (ஆவின்) பாய்ச்சல் என்ற தன்மை தோன்றும்படி, தம்மான் என்று புகழப்படும் சிவபிரானைப் பொருந்திய திருஞானசம்பந்தன் பாடிய இத்தமிழ்மாலையினைக் கற்பவர்களே தக்கோர் ஆவர். (மற்றையோர் தக்கோர் ஆகார் என்றவாறு).

மெய்ம்மானம் — உண்மையான பெருமை. ஒள் — ஒளி. வழிமுடக்குமாவின் பாச்சல் — இச்சித்திரக்கவியின் இயல்பு கூறியவாறு, தம்மான் — தம்பிரான் (சிவபிரான்) தமிழ் — தமிழ்மறையான இப்பதிகத்தையும், பிள்ளையாரது மற்றைய திருப்பதிகங்களையும் குறித்தது.

தக்கோர் — அறிஞர், உறவோர், தகுதியுடையோர், பெருமையிற் சிறந்தோர். தகுதி என்னும் சொல் அறிவு, உரிமை, ஒழுக்கம், குணம், சனக்கூட்டம், நடுநிலைமை, பொதுமை முதலிய பொருள்களைத்தரும். எனவே தகுதியுடையோர் என்பதற்கு இவற்றையுடையோர் எனக்கொள்க.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருஏகபாதம்

பதிகவரலாறு:- திருஞானசம்பந்தப்பிள்ளையார் சீகாழிப் பதியில் மூல இலக்கியமாகப் பாடியருளிய சித்திரக்கவிகளுள் திருஏகபாதம் என்னும் இத்திருப்பதிகமும் ஒன்றாகும்.

ஓரடியே பொருள் வேறுபட நான்குமுறை மடித்து வந்து ஒரு பாடலாக அமைதலின் ஏகபாதம் என்னும் பெயர்த் தாயிற்று. (ஏகம்-ஒன்று, பாதம்-அடி, ஏகபாதம்-ஓரடி) ''பிரமபுரத்துறை பெம்மானெம்மான்'' என்ற ஓரடியே நான்கு முறை மடித்து வந்து ஒருபாடலாக அமைந்துள்ளது காணலாம். இம்மாதிரியே மற்ற 11 திருப்பாடல்களிலும் ஒரு அடியே நான்குமுறை மடித்து வந்தமையும் காணலாம்.

சீகாழிப்பதியின் பன்னிரு பெயர்களையும் சார்த்தி இறை வரது பொருள்சேர் புகழ்களைப்போற்றும் இத்திருப்பதிகத்துக்கு திருஞானசம்பந்தப் பெருமானாரே மீண்டும் எழுந்தருளி பொருள் உரைத்தாலல்லது இதன் பொருள் இன்னது தான் என்று எவரும் துணிந்து கூற இயலாது. எனினும் கண்ணு டைய வள்ளலார் என்னும் பெரியார் திருவருள் துணைகொண்டு இப்பதிகத்தின் திருவுள்ளக்கருத்தாக உரை செய்தருளியவை, காஞ்சீபுரம் மஹாவித்வான் சபாபதி முதலியாரவர்களால் ஆராய்ச்சி செய்து 1898-ம்ஆண்டு பதிப்பிக்கப்பட்ட தேவாரம் பண்முறைப் பதிப்பிலும் பின்வந்த தேவாரப்பதிப்புக்களிலும் பிரசுரிக்கப்பட்டன. வேறு உரை காண இயலாத நிலையில் நாமும் இதனையே ஈண்டுக் கொடுத்துள்ளோம். வேறு இதை விட எளிய உரையோ அல்லது இவ்வுரைக்கே ஒரு விளக்க உரையோ பெறும் வாய்ப்புக் கிடைக்கும்காலத்து அதுவும்

வெளியிடப்படும். எனவே, தற்பொழுது இந்த உரையினையே கொண்டு திருஏகபாதக்கருத்தினை உணர்ந்து கொள்ள வேண்டுகிறோம்.

ஒவ்வொரு பாடலின் ஒவ்வொரு அடியையும் பெயர்த்து எழுதி பதப்பொருள், பொழிப்புரை இரண்டும் கொடுத்துள்ள படியால் பதிகத்தைத் தனியாகவும், பதிகத்திருவுள்ளக் கருத்தைத் தனியாக அடுத்தும் பிரசுரித்துள்ளோம்.

பண்–வியாழக்குறிஞ்சி] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான். 1

விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன். 2

புண்டரி கத்தவன் மேவிய புகலியே
புண்டரி கத்தவ... மேவிய புகலியே
புண்டரி கத்தவன் மேவ்ய புகலியே
புண்டரி கத்தவன் மேவிய புகலியே 3

விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன். 4

சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன் 5

பூசுரர் சேர்பூந் தராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந் தராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந் தராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந் தராயவன் பொன்னடி. 6

செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில். 7

பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன். 8

தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான். 9

காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே. 10

கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே 11

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை. 12

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# திருவேகபாதத் திருவுள்ளக்கருத்து

## கண்ணுடைய வள்ளலார் அருளிச்செய்தது.

1. பிரம புரத்துறை பெம்மா னெம்மான்

(இதன் பதப்பொருள்) பிரமம் — ஞானகாசமாகிய பராசக்தியை, புரத்துறை — அந்தப்பரிபூரணத்தை மிகுதியாக வியக்கப்பட்டது, பெம்மான் — பெருமான், எம்மான் — எந்தப் பெரியோன் என்க.

(பொழிப்புரை) ஞானகாசமாகிய பராசக்தியான பரிபூரணத்தை மிகுதியாகவியந்து பராசக்திக்கதீதமாகிய சுகமே வடிவாய் முதல் நடுவிறுதி காணப்படாதவஸ்து எந்தப் பெரியோன்.

பிரம புரத்துறை பெம்மா னெம்மான்

(ப-ள்) பிரமபுரத்து — மேல் நிலத்து, உறை—தண்ணீர், பெம் — விருப்பம், மான் — மான் போலும் விழியையுடைய பெண், எம்- எம்முடைய, ஆன்- ஆன்மா என்க.

(பொ-பு) மேல்நிலமாகிய ஆகாசத்தின் கண்ணேயோடா நின்ற கங்காதேவியை விரும்பித் திருமுடியிலே வைத்தவன், எம்மை நீங்காத நிலைமையையுடைய எமதுயிர்.

பிரம புரத்துறை பெம்மா னெம்மான்

(ப-ள்) பிரமம் — பிரமத்துவம், புரம் — சரீரம், உறை — என்னுதல், பெம் — ஆசை, ஆன் — அமையாமை, எம்மான் — என்னையொக்க வந்தவன் என்க,

(பொ-பு) பிரமரூபத்திலே எண்ணப்பட்ட என்னை முத்தியிலே விடுகைக்கு அமையாத விருப்பமுள்ளவனாய் என்னையொக்கவந்தவன்.

பிரம புரத்துறை பெம்மா னெம்மான்

(ப-ள்) பிரமபுரத்துறை — பிரமபுரமென்கிற சீகாழிப் பதியிலே வீற்றிரா நின்ற, பெம்மான் — கர்த்தாவானவன், எம்மான் - என்னுடைய சுவாமி என்க.

(பொ-பு) பிரமபுரமென்கிற சீகாழிப்பதியிலே வீற்றிரா நின்ற கர்த்தாவானவன், என்னுடைய சுவாமி, பெரியோனும் எனக்குயிரானவனும் என்னையொக்கவந்தவனும் சீகாழிப் பதியில் வீற்றிருக்கும் கடவுளெனக் கூட்டிப் பொருள் கொள்க.

2. விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்

(ப-ள்) விண்டு — மலை, அலர் — ஒலி, பொழில் — உலகம், அணிவு - அகப்படுத்தல், எண் - பெருமை, நுபுரம்— சிலம்பு, தரன் — தரித்துள்ளவன் என்க.

(பொ-பு) அஷ்டகுலபர்வதங்களும் ஒலிசிறந்த தரிசுமணி யாகவும், அகிலலோகங்களையும் உள்ளே அகப்படுத்தும் தன்மையவாயும், பெரிதாயுமுள்ள திருச்சிலம்பினைத் தரித் துள்ளவன். நூபுரம் எனற்பாலது நுபுரம் எனக்குறுகி நின்றது.

விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்

(ப-ள்) விண்டு- விஷ்ணு, அலர் — புறனுரை, பொழில் — அரசினிழல், அணி — பொருந்தி, வேணு — விருப்பம், புரத்துஅரன் — புரத்தையரித்தவன் என்க.

(பொ-பு) விஷ்ணுவின் புறனுரையாகிய சிவதூஷணத்தை அரசமரத்தினீழலில் அவனுடனிருந்து விரும்பியுள்ள முப் புரங்களைச் சங்கரித்துள்ளவன். அண்ணியெனற்பாலது அணி யென இடைக்குறையாய் நின்றது.

விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்

(ப-ள்) விண்தலர் - தேவர்கள், பொழில் - கற்பகப் பூஞ்சோலை, அணிவு-சூடுதல், ஏணு - எண்ணும், புரத்தரன் - தேவேந்திரன் என்க.

(பொ-பு) தேவர்கள், கற்பகப் பூஞ்சோலை மலர்களால் அர்ச்சிக்கப்படுகின்ற தேவேந்திரனுடைய. எணு எனற்பாலது ஏணு என நீண்டது. புரந்தரன் எனற்பாலது புரத்தரனென வலித்து நின்றது.

விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்

(ப-ள்) விண்டு — இதழ்விண்டு, அலர் — மலர்கின்ற, பொழில்அணி — சோலை சூழ்ந்த, வேணுபுரத்தரன் — வேணு புரமென்றுமொரு பெயருள்ள சீகாழிப்பதிக்குக்கர்த்தா என்க.

(பொ-பு) இதழ்கள்விண்டு மலர்கின்ற சோலைசூழ்ந்த சீகாழிப்பதிக்குக் கர்த்தாவாயுள்ளவன். தேவேந்திரன் மூங்கில் வழியாக வந்து பூசித்ததால் வேணுபுரமென்னும் பெயர் பெற்றது. சிலம்பினைத்தரித்துள்ளவரும் முப்புரத்தை எரித்தவரும், தேவேந்திரனுடைய சோலை சூழ்ந்த வேணுபுரத்தில் வீற்றிருக்கும் இறைவனெனக்கூட்டியுரைத்துக் கொள்க.

3. புண்டரி கத்தவன் மேவிய புகலியே

(ப-ள்) புண்டரிகத்தவன் — இதயகமலத்திலுள்ளவன், மேவிய புகலியே-எனக்கின்பந்தருவானுமாய் மீளா வழியாகிய புகலிடமாயுமுள்ளவன் என்க.

(பொ-பு) இதயகமலத்திருந்திடையருத ஆனந்தம் பொழியப்பட்டென்னை மலபோதத்தில் தள்ளாமல் எனக்கு அடைக்கலப் பொருளாயுள்ளவன்.

புண்டரி கத்தவன் மேவிய புகலியே

(ப-ள்) புண்டரிகம் - திரிபுண்டரம், தவன் - மிக்க பெருமையுடையவன், மேவிய - பொருந்திய, புகலி - சொல்லப்பட்டவன். ஏ - என்பதீற்றசை என்க.

(பொ-பு) ஆன்மாக்களுக்கு இரக்ஷையாக முண்டம் போலிருந்த திருநீற்றையணியப்பட்ட மிக்க கருணையான வனே யான் பாடும் பாடலை உவந்துள்ளவன்.

புண்டரி கத்தவன் மேவிய புகலியே

(ப-ள்) புண்டரிகம் — புலி, தவன் — தவமுனி, மே — கூத்து, வியம் - பொன், பு - பொது, கலி - கற்றவன் என்க.

(பொ-பு) புலிக்காலும், புலிக்கையும் பெற்றுள்ள வியாக் கிரபாத முனிவருக்கு ஞானனந்தமாகிய நாடகத்தைக் கனக சபையிலேயாடல் செய்யும், பரதவித்தையைக் கற்றுள்ளான். வியும் எனற்பாலது வியவெனக் கடை குறைந்து நின்றது.

புண்டரி கத்தவன் மேவிய புகலியே

(ப-ள்) புண்டரிகத்தவன் - பிரமதேவன், மேவிய - தனது போதத்தாலே பணியலுற்ற, புகலியே - புகலியென்னும் சீகாழிப் பதியே என்க.

(பொ-பு) கீழ்ச்சொன்ன லீலைகளெல்லாஞ் செய்கின்ற சிவன் தனதிச்சையால் பொருந்தியிருக்குமூர் பிரம்மா வானவன் பூசித்த புகலி என்னுந்திருப்பதி.

4. விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்

(ப-ள்) விள - விளாம்பழத்தை, கொளி - கன்றுகுணிலாக எறிந்து கொண்டவனாகிய விஷ்ணு, தி - விட்டு விளங்கா நின்ற, கழ்தரு - நின்மல நீடிய, எங்கு - எவ்விடத்தில், உருமேவினன் - தனது திருமேனியிலே மேவினன் என்க.

(பொ-பு) கன்றுகுணிலாக எறிந்து விளவின் கனியைக் கொண்ட நாரணனைப் பிரகாசஞ் செய்யப்பட்டு நின்மலமா யிருந்துள்ள தனது பெரிய திருமேனியிலே ஒன்று பாதியாக வைத்துள்ளான் என்க. தீ எனற்பாலது தி எனக் குறுகி நின்றது. கழுதரு எனற்பாலது கழ்தரு என நின்றது.

விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்

(ப-ள்) விலங்கு எனற்பாலது விளங்கு எனவும், ஒலி எனற் பாலது ஒளி எனவுந் திரிந்து நின்றது. விலங்கு-மாறுபாடாய், ஒலி - கதறப்பட்ட பௌத்தனது தலையிலே, தி - அக்கினியைச் சொரிந்து, கழ்தரு - மிக்க பயத்தோடும் விழுகின்ற, எங்கு - ஒலிக்கும், உருமு - இடியை, ஏவினன் - விழும்படியேவினன் என்க.

(பொ-பு) மாறுபாடாய்க் கதறப்பட்ட பௌத்தனது தலை யிலே அக்கினியைச் சொரிந்து மிக்க பயத்தோடும் விழுகின்ற இடியை விழும்படி யேவிப்பௌத்தரை வேரறுத்தானுந் தானேயன்றியானன்றுகும். தீ எனற்பாலது தி எனவும், காழ்தரு எனற்பாலது கழ்தரு எனவும், ஏங்கு எனற் பாலது எங்கு எனவும் குறுகி நின்றது.

விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்

(ப-ள்) விள்-நீங்குதல், அங்கு - அவ்விடத்தில், ஒளிது - ஒள்ளியது, இகழ்தரு - இகழப்படும், எங்குரு - எம்முடைய குரு, மேவினன் – கலந்தனன் என்க.

(பொ-பு) தனது பரிபூரணத்திலே தன்னையிழந்து இரண் டாய் விசுவமுருகித்தான் விஷமாகத் தூஷணப்பட்டு நிற்கின்ற எனக்கும் குருமூர்த்தியாய் வந்து என் பிறவியையொழித்து தனது பேரின்பமாகிய பரிபூரணத்தில் எனதடிமை குலையாம லிரண்டற வைத்தவன்.

விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்

(ப-ள்) விளங்கு ஒளி - எங்கும் பிரகாசியா நின்ற கீர்த்தி, திகழ்தரு - சிறத்தல், வெங்குரு - இயமனாற் பூசிக்கப்பட்ட திருப்பதி, மேவினன் - விரும்பினன் என்க.

(பொ-பு) கீழ்ச்சொல்லிப்போந்தப் செய்திகளெல்லாம் உடையனெத்தன்மையனேவென்னில், எங்கும் பிரகாசியா

நின்ற கீர்த்தியினுற் சிறக்கப்பட்டுள்ள இயமனுற் பூசிக்கப் பட்ட வெங்குருவென்னுந் திருப்பதியை விரும்பியுள்ளான். வெங்குரு என்பதும் சீகாழி.

5. சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்

(ப-ள்) சுடர்மண்-சூடார்மண், இம்-ஈமம், ஆளி-ஆளப் பட்டவன், கைத்தோணி - போர்தொலைத்த தும்பைமாலை, புரத்து-திரிபுரங்களையும், அவன்-அவம் பண்ணினவன் என்க.

(பொ-பு) சுடுநிலமாகிய மயானத்தை நடமாடுமிடமாகக் கொண்டும் முப்புரங்களையும் நகைசெய்து சுடப்பட்ட வெற்றிப் போரையுடைய தும்பைமாலைக் கடவுள். சூடார் எனற்பாலது சுடரெனவும் ஈமம் எனற்பாலது இம் எனவும் குறுகிநின்றன. துரோணமெனற்பாலது தோணியென மருவிற்று.

சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்

(ப-ன்) சுடர்மணி-சூடாமணி, மாளி-மாலி, கைத்தோள்-துதிக்கையினையுடைய யானையை, நிபுரத்தவன்-வடிவில்லாமற் செய்தோன் என்க.

(பொ-பு) என்னுச்சிக்குச் சூடாமணியுமாய் என்மேல் வைத்த மாலினையுடையனுமாய் யாகத்தின்கண் வந்த யானையை வடிவொழித்துப் போர்க்குந்தன்மையை உடைய வன்.

சூடாமணியெனற்பாலது சுடர்மணியெனவும், மாலி எனற்பாலது மாளி எனவும், தோல்எனற்பாலது தோள் என வும் நின்றன. மாலையுடையவன்-மாலி, தோல்-யானை.

சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்

(ப-ன்) சுடர்-சூரியன், மணி-கழுவி, மாளி-கெட்டவன், கைத்தோணி-தெப்பம், புரத்தவன்-புரந்தவன் என்க,

(பொ-பு)சூரியனுடைய களங்கத்தைக் கழுவப்பட்ட சமுத்திரம் போன்ற செனனக்கடலிலே வீழ்ப்பட்டழுந்திக் கெடா நின்ற ஆன்மாக்களுக்குக் கைப்பற்றிக் கரையேறுந் தெப்பமாகப் பிரணவமென்கிற மந்திரத்தை அவரது செவியின் கண்ணேயுண்டாக்கா நின்றவன்.

மண்ணி என்பது மணியென இடைகுறைந்து நின்றது. புரந்தவன் எனற்பாலது புரத்தவன்என வலித்தல் விகாரமாயிற்று.

சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்

(ப-ள்) சுடர்-விளக்கத்தையுடைய, மணி-நவரத்தினங்களாலே அலங்கரிக்கப்பட்ட, மாளிகை-மாளிகைகள் சூழ்ந்த, தோணிபுரத்தவன்-திருத்தோணிபுரத்தின் கண்ணே வாழ்கின்றவன்.

பெ ·) விளக்கத்தையுடைய நவரத்தினங்களாலே அலங்கரிக்கப்பட்ட மாளிகைகள் சூழ்ந்த திருத்தோணிபுரத்திலே வீற்றிருக்குஞ்சிவன் இத்தன்மையன்.

6. பூசுரர் சேர்பூந் தராயவன் பொன்னடி

(ப-ள்) பூ-பூமியிலுள்ளோர், சுரர்-தேவர்கள், சேர்-தோன்றுதல், பூ-இதயகமலம், தராயவன்-தரித்தவன், பொன்-பொலிவு, அடி-கண்ணுடி என்க.

(பொ-பு) பூமியிலுள்ளாரையுந் தேவகணங்களாயுள்ளாரையுந் தனது நாபிக்கமலத்திலே தோற்றுவிக்கப்பட்ட பிர்மா விஷ்ணுவினது போதத்திலே கண்ணுடியும் நிழலும் போலப் பிரதிவிம்பியா நின்றவன். ஆடி என்பது அடியெனக் குறுகி நின்றது.

பூசுரர் சேர்பூந் தராயவன் பொன்னடி

(ப-ள்) பூசுரர்-மலத்தைக்கழுவிய சிவஞானிகள், சேர்-திரட்சி, பூ-பொலிவு, தராய்-பெறப்பட்ட, அவன்-அக்கடவுள், பொன்-வனப்பு, நடி-நாடகமாடப்பட்டவன் என்க.

(பொ-பு) மலத்திரயங்களைக் கழுவப்பட்ட சிவஞானிகள் கூட்டம் பொலிவு பெறத்தக்க வனப்பையுடைய ஆனந்த நிருத்தஞ் செய்தருள்பவன்.

பூசுரர் சேர்பூந் தராயவன் பொன்னடி

(ப-ள்)பூசு-திருநீற்றை யுத்தூளிக்கப்பட்ட, உரர்-மார்பை யுடையவர், சேர்பு – அரிதல், ஊந்தராய் - தள்ளுதல், யவன் - யௌவனம், பொன்-அழகு, அடி-மூலம் என்க.

(பொ-பு) சர்வாங்கமுமுத்தூளம் பண்ணின மார்பை யுடைய சிவஞானிகளும், புண்ணிய பாவக் கட்டையரிந்து விசுவத்தைத் தள்ளப்பட்ட சிறப்பை உடையருமாயிராநின்ற வர்களுக்கு மிகுதியான மூலமாயுள்ளவன். உந்தராய் என்பது ஊந்தராயென நீண்டது.

பூசுரர் சேர்பூந் தராயவன் பொன்னடி

(ப-ள்) பூசுரர் - மறையோர், சேர் - திரட்சி, பூந்தரா யவன் - பூந்தராய் என்னுந் திருப்பதியிலேயுள்ளவன், பொன் னடி - அழகிய திருவடித்தாமரை என்க.

(பொ-பு) மறுவிலா மறையோர் வாழ்கின்ற திருப்பூந்தரா யென்னுந் திருப்பதியின்கண் வீற்றிராநின்ற சிவனது அழகிய திருவடித்தாமரை என்னையாண்டிடுவதாக. பூந்தராய் என் பதுஞ் சீகாழி.

7. செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்

(ப-ள்) செருக்கு - மயக்கம், வாய்ப்பு - மேலிடு, உடை யான் - கேடு செய்யான், சிரபுரம் - மேலாகிய இருப்பு, என்னில் - என்னுடைய போதமே என்க.

(பொ-பு) தனது திருவடிப் பிரசாதமில்லாதார்க்கு மல மயக்கத்தின் மேலிட்டைக் கெடாத சிவனுக்கு விசுவாதீத மான இருப்பிடம் எனது சைதன்யமே,

செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்

(ப-ள்) செர் - சத்தாதிகளஞ்சுஞ் சேரப்பட்ட, உக்கு - அந்தப்பூமி, வாய்ப்புடையான் - தன் வாயினிடமாகவுள்ள விஷ்ணு, சிர் - சிறப்பு, அபுரம் - உயிர் போன களேபரம், என்னில் - மேனிலே என்க.

(பொ-பு) சத்தாதிகளஞ்சுஞ் சேரப்பட்ட உலகத்தைத் தன் வாயினிடமாகவுடைய விஷ்ணுவின் களேபரத்தைத் திரு மேனியிலே தரித்துள்ளான், சேர் எனற்பாலது செர் எனவும், சீர் எனற்பாலது சிர் எனவுங் குறுகிநின்றன.

செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்

(ப-ள்) செருக்கு - ஆத்தும விகாரமாகிய கர்வம், வாய் - இந்திரியம், புடையான் - இடத்தான், சிரம் - மேல், புரம் - சரீரம், என்னில்-சத்தியம் என்க.

(பொ-பு) ஆத்தும விகாரமாகிய கர்மத்தினுலே இந்திரி யங்களுக்கு விடயமாகிய சுவர்க்கத்திலிச்சையுடையானுக்கு அந்தச்சுவர்க்கம் மெய்யாக விசேடித்திருக்குமன்றே.

செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்

(ப-ள்) செருக்கு - இந்திரிய யுத்தத்திற்கு, ஆய்ப்பு - இளைப்பு, உள்தையான் - உள் தைக்கப்படான், சிரபுர மென்னில் - சிரபுரமென்றுரைக்கில் என்க.

(பொ-பு) இந்திரிய வன்மையாகிய யுத்தத்துக்கு இளை யாமல் அந்த இந்திரியமாகிய பாணங்கள் தனதறிவுக்குள் தைக்கப்படான்.

(தாற்பரியம்) ஒருகாற்சிரபுரமென்று சொன்னவிடத்துப் பஞ்சேந்திரியங்களையும் அவியப்பொருது சிவனுடைய திரு வடியிலே அடையா நிற்பன் என்பதாம்,

8. பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்

(ப-ள்) பொன் - பொலிவு, நடி - கூத்துடையான், மாது- பத்திரகாளி, அவர் - பூதகணங்கள், சேர் - தங்குதல், புறவத் தவன் - சுடுகாட்டிலுள்ளவன் என்க.

(பொ-பு) பொலிவினையுடைய ம்ாயாநிருத்தம் புரிகின்ற பத்திரகாளியும், பூதபசாசமும் பொருந்திய மயானமே திருக் கோயிலாகவுள்ளவன்.

பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்

(ப-ள்) பொன் - தூய்மை, அடி - வழி, மாதவர் - தபோ தனர், சேர் - திரட்சி, புறவம் - முல்லை நிலம், தவன் - தவம் புரிந்துள்ளான் என்க.

(பொ-பு) சுத்தமான வழியைத் தரப்பட்ட மகாரிஷிகள் திரண்டு தவம் பண்ணுநிற்கும் ஆரணியத்தில் தனித்துத் தவம் புரியாநிற்குந் தபோதனன்.

பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்

(ப-ள்) பொன் - இலக்குமி, அடி - ஆபரணத்தொகுதி, மாதுஅவர் - இருடிபத்தினிகள், சேர்புஉறு - பிச்சையிட வந்தணைதல், அவத்தவன் - கலை சோர்தலைச் செய்த நிருவாணி என்க.

(பொ-பு) அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட் டுள்ள இலக்குமியையொத்த இருடிபத்தினிகள் பிச்சையிட வந்தணையுமிடத்துத் தனக்குள்ள நிருவாணத்தை அவர் களுக்குக் கொடுத்தவன்.

பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்

(ப-ள்) பொன் - பொன்னாற் சேய்யப்பட்ட பாடக நூபுர தாலாழிகள் முதலியவுமிடப்பட்ட, அடி - பாதம், மாதவர் -

கன்னியர், சேர் - இனமாய் விளையாடுதல், புறவத்தவன் — திருப்புறவமென்கின்ற திருப்பதியில் வாழ்கின்றவன் என்க.

(பொ-பு) பொன்னாற்செய்யப்பட்ட பாடக நூபுராதிகளைப் பாதங்களிலேயணிந்துள்ள கன்னியர் திரண்டு விளையாடும் புறவமென்னுந் திருப்பதியில் வாழ்கின்ற சிவன். புறவம் என்பதுஞ் சீகாழி.

(உரையாசிரியர் குறிப்பு:- "பொன்னடி மாதவர் சேர் புறவத்தவன்" என்பதை "மாதவர் சேர் பொன்னடி புறவத்தவன்" என்று மாற்றி "பெரிய தபோதனர்கள் இடைவிடாது தியானிக்கின்ற பொலிவு மிக்க திருவடிகளையுடைய திருப்புறவம் அமர்ந்த எம்பெருமான்" என்றும் ஒரு பொருள் கொள்ளலாம். சேர்தல் - இடைவிடாது தியானித்தல். திருக்குறள், கடவுள் வாழ்த்து - 3, பரிமேலழகர் உரைகாண்க.)

9. தசமுக னெரிதர வூன்று சண்பையான்

(ப-ள்) தசமுகன் - தயஃவயுடையவன், எரிதர - எரிவீச, ஊன்று - அழுந்து, சண் - வேகம், பையான் - படம் பொருந்திய பாம்பையுடையான் என்க.

(பொ-பு) ஆத்மாக்களிடத்துக் கருணை பிறக்குமிடமாயுள்ளவன். அக்னி வீசப்பட்டுத் திருவரையிலே அழுந்தச் சாத்தியுள்ள விரிந்த படத்தினையுடைய பாம்பை அரைஞாணாக உடையான்.

தசமுக னெரிதர வூன்று சண்பையான்

(ப-ள்) த - அது, சமுகம் - திரட்சி, நெரி - நேரானவன், தர - புலி, ஊன் - மாமிசம், துசு - தூசு, அண்பையான் - விரித்துடுத்தான் என்க.

(பொ-பு) எல்லாமிறந்து அந்தமாயுள்ள சிவஞானிகள் குழாத்துக்கு நேரிதாகிய சூனியமாயுள்ள பொருளைத் தோற்றுவித்துள்ளானுமாய்ப் புலியினது ஊன் பொருந்திய தோலா

டையைத் திருவரையிலே விரித்துடுத்தவன். நேரி எனற் பாலது நெரி எனக்குறுகி நின்றது. தாக்கு எனற்பாலது தர எனக்குறைந்தது. தூசு எனற்பாலது துசு எனக்குறுகி நின்றது. பாயான் எனற்பாலது பையானெனக் குறுகிப் போலியாயிற்று.

தசமுக னெரிதர வூன்று சண்பையான்

(ப-ள்) தசம் - தைசதம், உக - கெட, நெரி - எதிர்ப்பட்ட வன், தரம் - மலை, ஊன் - திருவுளத்தடைத்தல், து - விசேஷ ஞானமுள்ளவன், சண் - சட்சமயம், பையான் - பயனுயுள்ள வன் என்க.

(பொ-பு) ஆத்தும விகாரமான அகங்காரம் போகும்படி என்னறிவிலெதிர்ப்பட்டவன். கயிலாயமலையைத் திருவுள் ளத்தடைத்து எழுந்தருளியிருந்து ஆத்துமாக்களையிரக்ஷியா நின்ற விசேஷத்தையுடையவனென்றேத்தும் சட்சமயங்களுக் கும் அவரவர் கொண்ட பயனுகையுள்ளவன். நேரி எனற் பாலது நெரி எனக்குறுகி நின்றது.

தசமுக னெரிதர வூன்று சண்பையான்

(ப-ள்) தசமுகன் – பத்துத்தலைகளையுடைய இராவணன், நெரிதர-முறிய, ஊன்று - அமுக்கிய, சண்பையான் - சண்பை யென்னுந் திருப்பதியில் வீற்றிருப்பவன் என்க.

(பொ-பு) பத்துத் தலையுள்ள இராவணன், முறியும்படி திருவிரலாலடர்த்தவன் யாரென்னில், சண்பையென்னுந் திருப்பதியிலே வீற்றிருக்குங் கடவுள்.

10. காழி யானய னுள்ளவா காண்பரே

(ப-ள்) காழியான - நிலைபெற்று நின்மலமான சித்தத்தை யுடைய, யன்-பத்தரிடத்து, உள்ளவா-சத்தியம், காண்பரே - நோக்குவர் என்க.

(பொ-பு) நிலைபெற்று நின்ற நின்மலமாகிய சித்தத்தை யுடைய பத்தரிடத்துச் சத்தியப்பொருள் விளையும் பொருட்டு ஞான நாட்டத்தினாலே அவர்களைக் கடாக்ஷிக்கின்றவன்.

காழி யானய னுள்ளவா காண்பரே

(ப-ள்) காழியான் - களங்கமுள்ளவன், நயனுள்ளவா - ஞானக்கண்ணுள்ளவாறு, காண்பரே - நிலைமையாக நினைப்பரே என்க.

(பொ-பு)திருமிடற்றில் களங்கமுடையானது கருணையை நினைத்து ஞானநாட்டத்தையுடைய சிவஞானிகள் சிவனுக்கிச்சை தன்னடியார்க்கே ஆங்காரத்தைத் தடுக்குமதே பணியெனத்தமதறிவிலே கருதா நிற்பர்.

காழி யானய னுள்ளவா காண்பரே

(ப-ள்) காழியான்-விஷ்ணு, அயன்-பிரம்மா, உள்ள-நினைக்க, ஆ-அதிசயம், கண்-கருதுதல், பரே-அன்னியம் என்க.

(பொ-பு) விஷ்ணுவும் பிர்மாவுந் திருமுடியுந் திருவடியுங் காணும் பொருட்டு வராகமும், அன்னமுமாகக்கருதி வடிவு கொண்டார். ஐயோ! உள்ளபடி கருதிச் சிவனைப் பெருமல் அவர் கருதியதேதெனில் அன்னியமே கண்டனர். கண் எனற்பாலது கான் என நீண்டது.

காழி யானய னுள்ளவா காண்பரே

(ப-ள்) காழியான்-காழிப்பதியிலுள்ளான், அயன்-ஐயன், உள்-என்னறிவிலுண்டான, அவா-ஆசை, காண்பரே-தரிசிப்பாரே என்க.

(பொ-பு) என் பொருட்டால் காழியென்னுந் திருப்பதியைப் படைத்தானை, என்னையனை, எனதாசையை கீழ்ச் சொன்னவிருவர்களும் தாங்கள் தேடுந் தேட்டப்பிறிவில் மயக்கத்திலே தேட்டமழித்து தோன்று நிற்பவனைத் தேடி மறத்தலொழிந்தெவ்வாறு காண்பர்.

11. கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே

(ப-ள்) கொச்சை-அறியாமையைப் பொருந்தியுள்ள ஆணவ மலம், அண்ணலை-பொருந்துதலை, கூடகிலார்-மாறு பட்டார், உடல்-உடலாலே, மூடரே-மூடாரே என்க.

(பொ-பு) ஆணவமலத்தோடு கூடியுள்ள மயக்கத்துடன் மாறுபட்டோர்கள் மாயாதனுவாலும் மந்திரதனுவாலும் மறைக்கப்படார்கள். மூடார் எனற்பாலது மூடர் எனக்குறுகி நின்றது.

கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே

(ப-ள்) கொச்சை - புலால் நாற்றம், அண்ணல்-அணுகு தல், கூடகிலார் - மனம்பொருந்தமாட்டாதார் உடல் மூடரே-சரீரத்தைப் புதைப்பரே என்க.

(பொ-பு) புலால் நாற்றத்தைப் பொருந்திய அழுக்குமெய் யைப் பொய்யென்று மனங்கொள்ள மாட்டாமல் அதுவே தமது நிலைபெற்றவுருவாக நினைத்துத் துவராடையாலே உடம்பைச் சூழப்பட்ட பௌத்தரும்.

கொச்லையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே

(ப-ள்) கொச்சையள் - பேதைத்தன்மையையுடைய மச்சி யகந்தி, நலை-புலப்படா நின்ற அவளது நலத்தைக் கருதி, கூடு-சரீரம், அகில்ஆர்-அகில்மணம் பொருந்திய, உடன்-அத் தன்மையாளுடன், மூடரே-மொய்க்குமாறு பண்ணினது அது பொருந்துதல் என்க.

(பொ-பு) பேதைத்தன்மையுடைய மச்சியகந்தியினுடைய நலத்தைக் கொள்ளும் பொருட்டு அவளது சரீரமெல்லாம் சுகந்தமொய்க்கும்படி அவளுடனே பொருந்திய பராசரனாகிய இருடி வந்து சிவனைப் பொருந்தியருச்சிக்கப்படுதலால்.

கொச்சையன் ணலேக்கூட கிலாருடன் மூடரே

(ப-ள்) கொச்சை-கொச்சையாகிய பராசரன் பேராலுள்ள கொச்சையென்னுந்திருப்பதி, அண்ணலே-கர்த்தாவை, கூட கிலார்-நேர்படமாட்டார், உள்தல்-உள்ளுதல், மூடரே-அந்த காரநிறைந்த போதத்தையுடையவரே என்க.

(பொ-பு) பராசரமுனிவனுல் பூசிக்கப்பட்டு அவன் பெய ரால் பெயர்பெற்றுள்ள கொச்சைநகரென்னுந் திருப்பதியிலே எழுந்தருளியிராநின்ற தலைமையோனை உள்ளபடி தரிசனம் பண்ணி வழிபடமாட்டார்களது நினைவு எவ்வாறிருக்குமென் னில், மழைக்காலிருளும் வெளிதென இருண்ட மயக்கத்தை உடைய ஆணவ போதமாயிருக்கும்.

12. கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை

(ப-ள்) கழுமலம் — மிகுதிப்பட்டகுற்றம், அமுது — செலம், பதிக்க—விளைவிக்க, உள்நி — உள்ளநீ, கட்டு — வடி வாகக்கட்டுண்டல், உரை — தேய்தல் என்க.

(பொ-பு) மிகுதிப்பட்டதோஷமாயுள்ள சுக்கில சுரோணித மாகிய இருவகை நீரின் கண்ணே சிரமுதலாகிய அவயமாகத் தோன்றிப் பூமியின்கண் செனித்துப்பரிணமித்துப் பின்பு தேய்ந்து மரிக்கின்ற சென்மத்தையும். பரிணமித்தல் — வேறு படுதல்.

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை

(ப-ள்) கழு — கழுவப்படும், மலம்உது — ஆணவமலமு மற்றதனுடன் சுட்டிச்சொல்லப்பட்ட மாயா மலத்தையுங்கன்ம மலத்தையும், பதி — பாதி, கவுணி — உள்ளே அகப்படுத்திக் கவுளிகரித்துக்கொள்ளுதல், அன்கண் — ஆத்துமாவினிடத்து, துரை — இறைவர் என்க.

(பொ-பு) கீழ்ச்சொல்லிப்போந்த சென்மத்தையுங்கழுவி மலத்திரயங்களையும் கழுவாநிற்கும் (என்ற பதம் நிற்க இனிச்

சிவனது நாம முரைக்கற்பாற்று) தனது பாதியாகிய திருவரு ளினாலே என்னையகப்படுத்திக் கவுளிகரித்துக்கொண்டந்த அருள்வழியாக எனதிடத்திலிடையருமல் வாழுந் தன்னை யெனக்குத்தந்து அடிமை குலையாமலெக்கண்ணும் விட்டு விளங்குங் கர்த்தர். பாதி எனற்பாலது பதியெனக் குறுகி நின்றது.

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை

(ப-ள்) கழும் — மயக்கம், அலம் — அலக்கண்படுதல், அமுது — அமுதம், பதி — கர்த்தர், க - சிரசு, உணியன் — உண்ணப்பட்டவர், கட்டு - விளக்கம், உரை - பொன் என்க.

(பொ-பு) மாயா மயக்கத்தின் கண்ணே மயங்கி பெத்த முத்தியிரண்டுந்தெரியாமல், திண்டாடப்பட்ட மலபோதர்க்கு அமுதம்போன்று அரிதாயுள்ளவனுமாய், விட்டு விளங்கப்படா நின்ற பொன்னுருவையுடையவனுய்ச் சிருஷ்டிக்குக் கர்த்தா வாகிய பிரமனது சிரக்கபாலத்திலே பிச்சை கொண்டு நுகருங்கருணையாளனே.

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை

(ப-ள்) கழுமலமுதுபதி — கீழ்ச்சொன்ன பதியின் கண், கவுணியன் — கவுணிய கோத்திரத்து வந்த மறையோனாகிய யான், கட்டு — காட்டு, உரை — உரைப்பீராக என்க.

(பொ-பு) திருக்கழுமலமென்னும் மூவாப்பழங்கிழமைப் பன்னிரு பெயர்பெற்ற அனாதிமூலமாகிய பதியிடத்துக் கவுணிய கோத்திரத்திலே தோன்றப்பட்ட யான் நிவேதிக்கப் படும் காட்டாகிய இப்பாடலைக் கீழ்ச்சொன்னவற்றிலும் மலத் திரயங்களிலும் அழுந்தாநின்ற ஒருத்தராகிலும் பலராகிலும் உரை செய்வார் உயர்ந்தாரே ஆதலாலிப் பாடலையிடை விடாமலுரை செய்வீராக. காட்டு என்பது கட்டெனக் குறுகி நின்றது.

சிவம்




உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# பல்பெயர்ப்பத்து

பதிகவரலாறு : சீகாழிப்பதியில் தங்கியருளிய காலத்தில் திருஞானசம்பந்தப் பெருமானுர் பாடியருளியதும் வரலாற்று முறையில் வராததுமாகிய பதிகங்களுள் பல்பெயர்ப்பத்து என்ற இப்பதிகமும் ஒன்ருகும். சீகாழியின் பலவாகிய (இங்குப் பன்னிரண்டு) பெயர்களைப் போற்றிய பத்து என்பது பொருள் ஆகும். பத்துக்கும் மேற்பட்ட பாடல்கள் இருப்பினும் மரபு பற்றிப் பத்து என்ருர். பதிகம் எனினும் பத்து எனினும் ஒன்றே.

பண்— தக்கேசி] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

எரியார்மழுவொன் றேந்தியங்கை யிடுதலையேகலனு
வரியார்வளையார் ஐயம்வவ்வாய் மாநலம்வவ்வுதியே
சரியாநாவின் வேதகீதன் தாமரைநான்முகத்தன்
பெரியான்பிரமன் பேணியாண்ட பிரமபுரத்தானே. 1

பதிகப்பொழிப்புரை : 1. வாய்மை தவறுதலில்லாத நாவினுல் வேதகீதங்களை ஓதுகின்றவனும், தாமரைமலரை இடமாகக் கொண்டவனும், நான்முகத்தனும், பெரியவனுமாகிய பிரமதேவன் போற்றி வழிபட, (அவனை) ஆண்டருளிய திருப்பிரமபுரத்துப் பெருமானே! எரிதலைப் பொருந்திய ஒரு மழுவினை ஏந்தி அழகியகையில் இடப்பட்ட தலையோட்டினையே கலனுகக் கொண்டு (பிட்சாடனக்கோலம் கொண்ட நீர்) வரி பொருந்திய வளையல்களை அணிந்த தாருகவனப் பெண்கள் இடும் பிச்சையை ஏற்றுக்கொள்ளாது, அவர்களது அழகினைக்

கவர்ந்து கொள்கின்றீரே! (இது ஏன் என்று வினவுகிறது இப் பாடல். மற்ற திருப்பாடல்களுக்கும் இவ்வாறே கொள்க).

இத்திருப்பதிகம் முழுவதும் அகப்பொருள் துறையில் அமைந்ததாகும். சிவபெருமான் தாருகவனத்து இருடியர் களின் (இருடி — முனி) பத்தினியர்களது கற்பினையளந்து காட்டுவதற்காக இரவலர் கோலத்தில் சென்றார் என்பதும், பிச்சையிட வந்த முனிபத்தினியர் பிட்சாடனரின் பேரெழிலில் மயங்கிக் காமுற்றனர் என்பதும் கந்தபுராணத்துள் விரித்துக் கூறப்படுகிறது. அதனை ஆதாரமாகக் கொண்டு பிள்ளையார் இத்திருப்பதிகத்தினை அமைத்துள்ளனர் என்க. இறைவனின் பேரெழிலில் மயங்கித் தமது எழிலும், நாணமும், குழலும், வளையும், ஆடையும் சோர்ந்த அம்முனிபத்தினியர் செயலை இறைவனார் மீது ஏற்றி, அவர்களது அழகையும் வளையையும், கலைகளையும் கவர்ந்தது எற்றுக்கு என வினவுவார் போல உரைத்தருளிய திறன் கண்டு இன்புறுதற்குரியது. பதிகம் முழுமையும் இப்பொருள் ஒன்றினையே குறித்ததாகக் கொள்க.

சரியாநாவின்—சரியா நாவினையுடைய, சரியாநா-வளைதல் இல்லாத, அதாவது வாய்மை தவறாத நாக்கு. சரிதல் அல்லது வளைதல் என்பது சொன்ன சொல் தவறாமையைக் குறித்தது.

இடுதலை — கபாலம்; வரியார் வளையார் — ஒளி பொருந் திய வளையல்களையுடைய முனிபத்தினியர்; வவ்வுதல்—கிரஹித் தல், கவருதல்.

பிரமதேவன் வழிபட்டதால் பிரமபுரம் என்ற பெயர் இத் தலத்துக்கு வந்தமையும் இத்திருப்பாடல் விளக்கியதாகக் கொள்க.

பெயலார்சடைக்கோர் திங்கள்சூடிப் பெய்பலிக்கென்றயலே
கயலார்தடங்கண் அஞ்சொல்நல்லார் கண்துயில்வவ்வுதியே
இயலானடாவி யின்பமெய்தி இந்திரன் ஆள்மண்மேல்
வியலார்முரச மோங்குசெம்மை வேணுபுரத்தானே. 2

2. இந்திரன் தனது அரசாட்சியை மண்ணுலகத்தில் (சீகாழியில் மறைந்திருந்து) முறைப்படி நடத்தி இன்பமெய்தியதும், பெரிய முரசங்களின் ஒலி ஓங்கும் செம்மையுடையதுமான திருவேணுபுரத்துக் கோயில் கொண்ட சிவ பெருமானே! கங்கை பொருந்திய சடைக்கு ஒரு பிறைச்சந்திரனையும் சூடிப் பிச்சைக்கென்று புறப்பட்டுத் தாருகவனத்தில் மீன்கள் போன்ற கண்களையும அழகிய சொற்களையுமுடைய முனிபத்தினியரது கண்துயிலைக் கவர்ந்து கொண்டனையே! (இது ஏன்)

இந்திரன் சூரபத்மனுக்கஞ்சி இந்திராணியுடன் சீகாழியில் மறைந்து வசித்த வரலாறு கந்தபுராணம், அசுர காண்டம் இந்திரன் கரந்துறை படலத்தில் விரிவாகக் காணலாம். "பத்துடன் இரண்டு நாமம் படைத்த தொல்காழி நண்ணி, இத்தலம் இனிதே என்று இருந்தனன் இமையோர் கோமான்" என்று ஆண்டுக் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு சீகாழியில் மறைந்து வசித்ததையே 'இந்திரனுள் மண் மேல் எனக் கூறியருளினுர். மறைந்திருந்து சீகாழியில் இருந்தபோதும் அவன் இந்திரனேயாகலின் இந்திரன் ஆள் மண்மேல் என உபசாரயாகக் கூறினர் போலும். அவ்வாறு சீகாழியில் வசித்தபோது, சிவபிரானைப் பூசிப்பதற்காக நந்தனவனம் வைத்து, பல்வகை மலர்களால் பூசித்துவந்தான். அசுரர்கள் இந்திரனையும் இந்திராணியையும் தேடிப் பூவுலகத்துக்கும் வருவது அறிந்து அங்குத் தன் மனைவியுடன் மூங்கிலாகி (வேணுவாகி) மறைந்து தவஞ் செய்து கொண்டிருந்தான். இந்த வரலாற்றையுட்கொண்டதே "இந்திரன் ஆள் மண் மேல் வேணுபுரத்தானே" என்ற பாடற்பகுதியாகும். சீகாழிக்கு வேணுபுரம் என்ற பெயர் வந்தமைக்கு இந்த வரலாறும் ஒரு காரணமாம். (மற்ற காரணங்கள் வேறு பதிக உரையில் விளக்கப்படும்).

பெயல் — மழை, மேகம், இங்கு கங்கையைக் குறித்தது.

அயலே — இது இங்குப் பிச்சையெடுக்கச் சென்ற தாருகவனத்தைக் குறித்தது.

பெய்பலி — பெய்யும்பலி; பெய்தல் — இடுதல்; பலி — பிச்சை. அஞ்சொல் — இனியசொல்; நல்லார் — பெண்கள். பிச்சைக்கென்று புறப்பட்டநீர் பிச்சையை ஏற்பது முறை. அங்ஙனமிருக்கப் பிச்சையிட வந்த பெண்களைத் துயிலிழக்கச் செய்தீரே! இது முறையோ?

கண்துயில் வவ்வுதியே என்றது இறைவனின் எழிற் கோலத்தில் மயங்கிக் காமுற்ற பெண்கள், விரகநோயால் தூக்கம் இழந்து துன்புற்றார்கள். இங்ஙனம் அவர்கள் உறக்க நீத்ததை இறைவர் கவர்ந்து கொண்டதாகக் கூறியது ஒரு நயம்.

நகலார்தலையும் வெண்பிறையும் நளிர்சடைமாட்டயலே
பகலாப்பலிதேர்ந் தையம்வவ்வாய் பாய்கலைவவ்வுதியே
அகலாதுறையும் மாநிலத்தி லயலின்மையாலமரர்
புகலான்மலிந்த பூம்புகலி மேவியபுண்ணியனே. 3

3. மக்கள் நீங்காது வசிக்கும் இந்த மாநிலத்தில் அடைக்கலம் புகுதற்கு வேறு இடமின்மையால் சூபரத்மனுக்கு அஞ்சிய தேவர்கள் சரணடைதலால் நிறைந்த அழகிய திருப் புகலியில் விரும்பி எழுந்தருளிய புண்ணியரே! நகுதலையுடைய தலையும் வெண்திங்கட்பிறையும் குளிர்ந்த சடையின் மீது பக்கத்தில் வைத்து, பகற்காலத்திய பிச்சையெடுக்கச் சென்று முனிபத்தினியர் இட்ட பிச்சையினைக் கொள்ளாது, அவர்களது பரந்த ஆடைகளைக் கவர்கின்றீரே. (இது ஏன்?)

நகலார் தலை — நகுதல் (சிரித்தல்). தாருகவன இருடியர்கள் செய்த ஆபிசார வேள்வியினின்றும் கிளம்பி இறைவர் மீது நகைத்துக்கொண்டே பேரொலியுடன் வந்த தலை. நளிர் சடை — குளிர்ச்சியுடைய சடைமுடி.

பாய்கலை வவ்வுதியே என்றது இறைவர் மீது உண்டான காம மிகுதியால் அவரையணைய ஓடிவந்த பெண்கள் தங்கள் ஆடைகள் நழுவுதலைக்கூட உணராது வந்தனர். எனவே

அவர்கள் ஆடைகளை இழந்ததை இறைவனார் வவ்வினதாக நயம்பட உரைத்தருளினர் எனக் கொள்க.

சூரபத்மனுக்கஞ்சிய தேவர்கள் வேறு புகல் இன்மையால் சீகாழியில் வந்து இறைவனைச் சரணடைந்தனர். இங்ஙனம் தேவர்களால் அடைக்கலம் புகப்பெற்ற இடம் புகலி எனப் பெயர்க்காரணம் விளக்கியவாறும் கண்டு கொள்க.

சங்கோடிலங்கத் தோடுபெய்து காதிலொர்தாழ்குழையன்
அங்கோல்வளையார் ஐயம்வவ்வா யால்நலம்வவ்வுதியே
செங்கோல்நடாவிப் பல்லுயிர்க்குஞ் செய்வினைமெய்தெரிய
வெங்கோத்தருமன் மேவியாண்ட வெங்குருமேயவனே. 4

4. கொடியவன் எனக்கருதப்படும் இயமன் தான் செங்கோல் முறைப்படி பல்லுயிர்க்கும் நடத்தும் ஆட்சியின் உண்மை தெரியும்படி இறைவனைப் பூசித்து வரம் பெற்று தன் அரசாட்சியை நடத்திய திருவெங்குரு மேவிய பெருமானே! சங்கத்தினால் ஆன தோடு இலங்க அதனுடன் மற்றொரு காதினில் குழையும் அணிந்து (உமையொருபாகனாய் விளங்கும்) நீ அழகிய திரட்சியுடைய வளையல்களை அணிந்தவர்களான தாருகவன முனிபத்தினியர்கள் இடும் பிச்சையினை ஏற்றுக்கொள்ளாது அவர்களது அழகினைக் கவர்ந்து கொண்டனையே! (இது ஏன்?)

தோடு பெண்களின் காது ஆபரணம். குழை ஆண்களின் காதாபரணம். இரண்டையும் ஒரு சேரக்குறிப்பிட்டருளியது இறைவர் மாதொருபாகனாதல் பற்றியாமென்க.

நலம் வவ்வுதியே என்றது காம மிகுதியால் அப்பெண்கள் தம் மேனி நிறம் மாறி பசலை நிறம் பெற்று அழகிழந்தனர் என்பதாம். அப்பெண்கள் அழகிழந்ததை இறைவர் கவர்ந்து கொண்டதாகக் கூறியருளிய நயம் இன்புறற்பாலது.

செங்கோல் நடாவி........ தருமன் மேவியாண்ட வெங்குரு என்றது :— தங்களது தீவினைப்பயனால் நரகத்தில் துன்பப்

படும் உயிர்கள் தமது தீவினைப்பயன் இது என்று உணராது இயமனைப் பழித்தனர் என்றும் அப்பழிச்சொற்களுக்காற்றாத இயமன், சீகாழியில் இறைவனைப் பூசித்து உயிர்கள் தமது முன்னைய வினைகளின் உண்மை தெரிந்து கொண்டு, தன்னைப் பழிக்காதிக்க வரம் பெற்றான் என்றும், இயமன் பூசித்த காரணத்தால் இறைவராணைப்படி இந்நகர் வெங்குரு எனப் பெயர் பெற்றது என்றும் தலபுராணங்கூறுகிறது. இதனைக் கருத்திற் கொண்டே பிள்ளையார் இங்ஙனம் பாடியருளினார் எனக் கொள்க.

வெங்கோத்தருமன் — கொடிய கோ தருமன் என்றது நடுநிலைமைதவறாது உயிர்களுக்கு வினைகளுக்கேற்ற நரகினை விதித்தலால் இயமன் கொடிய கோ எனப்பட்டான்.

தணிநீர்மதியஞ் சூடிநீடு தாங்கியதாழ்சடையன்
பிணிநீர்மடவார் ஐயம்வவ்வாய் பெய்கலைவவ்வுதியே
அணிநீருலக மாகியெங்கும் ஆழ்கடலாலழுங்கத்
துணிநீர்பணியத் தான்மிதந்த தோணிபுரத்தானே. 5

5. உலகம் எங்கும் சூழ்ந்த நீராகிக் கடலால் அழுங்க, அக்காலத்து அத்துணிவு கொண்ட நீர் பணியும்படி, தான் கடலில் மிதந்த திருத்தோணிபுரத்துச் சிவபெருமானே! தண்ணிய நீராகிய கங்கையையும் சந்திரனையும் சூடி அவற்றைத் தாங்கிய, நீண்டும் தாழ்ந்துமுள்ள சடையனாகிய நீர், காம நோய் வயப்பட்ட முனிபத்தினியர்கள் இட்ட பிச்சையை ஏற்காது அவர்கள் உடுத்த ஆடையைக் கவர்ந்து கொண்டீரே! (இது ஏன்?)

ஊழி நீர்ப்பெருக்கில் உலகமெல்லாம் ஆழ்ந்த காலத்து இத்தலம் மூழ்காது அவ்வெள்ளத்தில் பிரணவமாகிய தோணியாக மிதந்து தன்னகத்துச் சிவபெருமான் அம்மையாருடன் எழுந்தருளப்பெறுவதால் திருத்தோணிபுரம் என்ற பெயர் பெற்றது.

தணிநீர் — தண்ணிய (குளிர்ச்சிபொருந்திய) நீர் (கங்கை). இறைவர் சடையின் மீது தாங்கியபோது கங்கையின் வேகந்தணிந்தமையாலும் தணிநீர் எனக் கூறினர் என்பதும் பொருந்தும்.

பிணி நீர் மடவார் — காமப்பிணியின் தன்மை மேலிட்ட மடவார்.

பெய்கலை — உடுத்திய ஆடை.

பெய்கலை வவ்வுதியே என்பதற்கு முன் மூன்ருவது திருப்பாடலில் பாய்கலைவவ்வுதியே என்பதற்குக் கூறியதையே கொள்க.

துணி நீர் பணிய:—உலகத்தை ஆழ்த்தும் துணிவுடன் பெருக்கெடுத்த பிரளய வெள்ளம் இங்குக் கீழ்ப்படியும் தன்மை பெற்றது என்று கூறியதாம்.

கவர்பூம்புனலுந் தண்மதியுங் கமழ்சடைமாட்டயலே
அவர்பூம்பலியோடு ஐயம்வவ்வா யால்நலம்வவ்வுதியே
அவர்பூணரையர்க் காதியாய அடல்மன்னருள்மண்மேல்
தவர்பூம்பதிக ளெங்குமெங்குந் தங்குதராயவனே. 6

6. முடிசூடும் மன்னர்கட்கெல்லாம் முதன்மையாகிய வலிமை மிக்க திருமால் காத்தல் தொழிலைச் செய்கின்ற இவ்வுலகத்தில் முனிவர்கள் பூசித்த அழகிய தலங்கள் எங்கிலும் வீற்றிருந்து அருள்புரியுந் திருப்பூந்தராய் கோயில் கொண்ட பெருமானே! கண்ணைக்கவரும் அழகிய புனலான கங்கையையும் குளிர்ச்சிமிக்க சந்திரனையும் நறுமணங்கமழும் சடைமேல் அருகருகே வைத்துப் (பலிக்குச் சென்ற நீர்) தாருகவனத்து அம்முனிபத்தினியர் பூக்களினுல் செய்த வழிபாட்டையும் உணவுப் பிச்சையையும் ஏற்காது அவர்களது அழகைக் கவர்ந்து கொண்டீரே! (இது ஏன்?)

பூம்பலி:—பூக்களால்இடப்பட்ட பலி, பாத பூஜை. பிட்சாடனத் திருக்கோலத்தில் மயங்கிய முனிபத்தினியர் அவர்க்குப் பாத பூஜையும் செய்தனர் என்க,

நலம் வவ்வுதியே என்பதற்கு முன் நான்காம் பாடலில் இதே சொற்றொடர்க்குக் கூறியவற்றையே கொள்க.

உலகத்து அரசர்களைத் திருமாலின் அம்சம் எனக்கூறும் வழக்குபற்றி பூண்அரையர்க்காதியாய மன்னன் எனத் திருமாலைக் குறிப்பிட்டருளினர். திருமாலை மண்ணை ஆள்வதாக் கூறியது அவர் காத்தல்தொழில் பூண்டது பற்றி ஆகும்.

தவர்—தவசிகள், முனிவர்கள். எங்குமெங்கும்—எல்லா இடங்களிலும் எனப்பொருள் தரும் அடுக்குச்சொல்.

வராகாவதாரமெடுத்த திருமால் இரணியனைக் கொன்ற பழிபோகப் பூக்களைக் கொண்டு பூசித்தமையால் பூந்தராய் எனப்பெயர்க் காரணத்தைக் குறிப்பாலுணர்த்தியது கண்டு கொள்க.

முலையாழ்கெழுவ மொந்தைகொட்ட முன்கடைமாட்டயலே
நிலையாப்பலிதேர்ந்து ஐயம்வவ்வாய் நீநலம்வவ்வுதியே
தலையாய்க்கிடந்திவ் வையமெல்லாந் தன்னதொராணை நடாய்ச்
சிலையான்மலிந்த சீர்ச்சிலம்பன் சிரபுரமேயவனே. 7

7. (உடல் முதலியன இன்றி) தலைமட்டுமாய்க் கிடந்து (ராகு என்னும் கோளாகியதொரு தன்மையால்) இவ்வுலக மெல்லாம் தன்னுணையின் படி நடக்கச் செய்யும் சிலம்பன் வழி பட்டதும், விழாவின் ஓசைகள் மலிந்ததுமான பெருமை யுடைய திருச்சிரபுரம் மேவிய பெருமானே! முல்லையாழ் ஒலி ஒத்து இசைக்க, மொந்தை என்னும் வாத்தியம் கொட்ட, வீடுகளின் வாயில்களின் அருகிலே நிலையாப்பிச்சையாக ஐயம் ஏற்காது (ஐயமிடவந்த மடவார்களது) எழில்நலத்தைக் கவர்ந்து கொண்டீரே! (இது ஏன்?)

தேவர்களுடன் மறைவாகக் கலந்து வேற்றுருவுடன் அமிர்தமுண்ட சிலம்பன் என்னுமசுரனைச் சூரியன் காட்ட

மோகினி வேடம் பூண்டு அமிர்தம் பங்கிட்ட திருமால் சட்டு வத்தினால் வெட்ட, வெட்டுண்ட தலை (சிரம்) பூசித்து ராகு என்னும் கோளாகிய காரணத்தால் சீகாழிக்குச் சிரபுரம் என்ற பெயர் ஏற்பட்டது. இதுவே பின்னிரண்டு அடிகளால் கூறப் பட்ட செய்தியாகும். சிரம் ராகுவாகவும் உடல் கேதுவாகவும் ஆயின என்பது தலபுராணக் கூற்று.

வையமெல்லாம் தன்னதொராணை நடப்ப என்றது நவ கோள்களுள் ராகுவும் ஒன்று என்பதுபற்றிய உபசாரமாகக் கொள்க.

மொந்தை — ஒருவகைத் தோற்கருவி. பிச்சை எடுப் போர் வாத்தியங்களை இசைத்துக் கொண்டும், பாடிக் கொண்டும் செல்லும் வழக்கம் குறிக்கப்பட்டது.

நிலையாப்பலி — பலி ஏற்றல் இறைவர்க்கு நிலையான தொழில் அல்ல என்பதும் தாருகவனத்து இருடியர்களின் ஆணவத்தையடக்கத் தற்காலிகமாகக் கொண்டதே என்பதும் குறித்தது.

நலம் வவ்வுதியே — முன் வந்த இடங்களில் உரைத்தது கொள்க.

எருதேகொணர்கென் றேறியங்கை யிடுதலையேகலனுக்
கருதேர்மடவார் ஐயம்வவ்வாய் கண்துயில்வவ்வுதியே
ஒருதேர்கடாவி ஆரமருள் ஒருபதுதேர்தொலையப்
பொருதேர்வலவன் மேவியாண்ட புறவமர்புண்ணியனே. 8

8. ஒரு தேரைச் செலுத்திப் போரில் பத்துத் தேர்களை அழியுமாறு போர் செய்யும் தேர்வல்லவனாகிய சிபி என்னும் சோழச் சக்கரவர்த்தி பொருந்தி அரசாட்சி செய்த திருப்புறவம் அமர்ந்த புண்ணியனே! ''எருதைக் கொண்டுவா'' என்று ஆணை யிட்டு அதன்மேலேறிப் பிச்சைக்குச் சென்று பிரமகபாலத்தைக் கலனாகக் கொண்டு கருதத்தக்க பேரழகினையுடைய முனி

பத்தினியர் இடுகின்ற பிச்சையை ஏற்காதவனாகி அவர்களது உறக்கத்தைக் கவர்ந்து கொண்டனையே! (இது ஏன்?)

சிபிச்சக்கரவர்த்தியின் தசை எடைக்கு எடை பெற்ற அக்னிதேவனாகிய புரு அப்பாவம் நீங்க வழிபட்ட தலம் என்பதைக் குறிப்பாலுணர்த்தியதாகக் கொள்க.

கருது ஏர் மடவார் — கருதுதற்குரிய பேரழகுடைய பெண்கள்.

கண்துயில் வவ்வுதியே — முன் இரண்டாம் பாடல் உரையில் கூறியது இங்கும் கொள்க,

பின்னிரண்டடிகளால் சிபிச் சக்கரவர்த்தியின் தேர்ப் போரின் பேராற்றல் குறித்தருளினார்.

துவர்சேர்கலிங்கப் போர்வையாரும் தூய்மையிலாச்சமணும்
கவர்செய்துழலக் கண்டவண்ணங் காரிகைவார்குழலார்
அவர்பூம்பலியோடு ஐயம்வவ்வா யால்நலம்வவ்வுதியே
தவர்செய்நெடுவேல் சண்டனாளச் சண்பையமர்ந்தவனே. 9

9. துளையிடும் நீண்ட வேலையுடைய இயமன் தன்னரசாட்சியை நடத்தும்படி அருள்செய்து, சண்பை என்ற இப்பதியில் அமர்ந்த பெருமானே! துவர் ஊட்டிய உடைகளைப் போர்வையாகக் கொண்டவர்களாகிய பௌத்தர்களும், அழுக்கான உடலையுடைய சமணர்களும் உண்மைப் பொருள் அறியாது மனம் உழலச் செய்தது போல நீண்ட கேசத்தையுடைய காரிகையர்களான முனிபத்தினியரது மலரிட்டுப் பூசிக்கும் பலியோடு அவர்களிடும் உணவுப் பிச்சையையும் ஏற்காது அவர்களது நலத்தைக் கவர்ந்து கொண்டனையே! (இது ஏன்?)

புறச்சமயிகள் மனந்தேராது உழன்றது போல் இப்பெண்களும் காம நோயால் மனக்கலக்கமுற்று அதனால் எழில் இழந்தனர் என்று கொள்க. நலம் வவ்வுதல் பற்றி முன் வந்த இடங்களில் கூறியது கொள்க,

காரிகை வார்குழலார் — வார்குழல் காரிகையார் என மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது. காரிகை — பெண். இவ்வாறின்றிக் 'காரிகை' என்ற சொல்லுக்கு அழகு என்ற பொருளுமிருப்பதால் அழகிய நீண்டகுழலை (கூந்தலை)யுடைய பெண்கள் எனப்பொருள் கொள்ளுதலும் பொருத்தமே.

தவர்செய் — தவர் செய்தல் என்பது துளைத்தல் என்ற பொருளில் வந்தது.

சண்டன் ஆள என்பதைச் 'சண்டனை அடக்கியாள' என இரண்டாம் வேற்றுமை உருபு விரித்து, மார்க்கண்டேயருக்காக இயமனை உதைத்த வரலாற்றை இது உள்ளடக்கியது என்பர் திருத்தருமையாதீனக் குறிப்புரை ஆசிரியர்.

நிழலால்மலிந்த கொன்றைசூடி நீறுமெய்பூசிநல்ல
குழலார்மடவார் ஐயம்வவ்வாய் கோல்வளைவவ்வுதியே
அழலாயுலகங் கவ்வைதீர ஐந்தலைநீள்முடிய
கழல்நாகரையன் காவலாகக் காழியமர்ந்தவனே. 10

10, இந்நிலவுலகம் துன்பத்தால் வெதும்புதலினின்றும் நீங்கும்படி, ஐந்துதலைகளும் நீண்டமுடிகளும் விரக்கழலுமணிந்த காளிதன் என்னும் பாம்பரசன் காவல் செய்யும்படி, சீகாழியில் அமர்ந்த பெருமானே! மிக்க நிழலைத்தரும் கொன்றை மரத்துப் பூக்களாலாகிய மாலையை அணிந்து கொண்டு, உடல்முழுவதும் திருநீறுபூசி (பிச்சைக்குச் சென்றபோது) அழகிய கூந்தலுடைய பெண்கள் இடும் பிச்சையை ஏற்காது அவர்களது கைகளில் அணிந்த திரட்சியுடைய வளையல்களைக் கவர்ந்து கொண்டனையே! (இது ஏன்?)

கோல்வளை வவ்வுதியே என்றது தாருகவன முனிபத்தினியர் இரவலர் கோலத்தில் வந்த இறைவரின் எழில் மிகுதியால் அவரிடங் காமமிக்குற்றவர்களாய், அவரைக் கூடப்பெறாத துன்பத்தால் உடல் மெலிய, கைகளினின்றும் வளையல்கள் தாமாகவே நழுவி விழ்ந்த நிலையைக் குறித்ததாகும்.

இதனையே இறைவர் கவர்ந்து கொண்டதாகப் பிள்ளையார் கூறினர் என்க,

அழலாய் உலகங்கவ்வை தீர என்றது நெருப்பினால் வெதும்புவது போல உலகம் துன்பத்தை யனுபவிப்பதினின் றும் நீங்குவதற்காக இறைவனார் நிலவுலகில் சீகாழியில் கோயில் கொண்டுள்ளார் என்பதாம். அவரை வழிபட்டு உலகம் துன்பத்தினின்றும் நீங்கவேண்டும் என்பது பிள்ளை யாரது திருவுள்ளக் கருத்தாமென்க.

பாம்புகளுக்குக் கால்கள் கிடையாவாயினும், கழலணிந்த நாகம் எனக்குறிப்பிட்டது, அரையுன் (அரசன்) என்ற சிறப்பு பற்றிய உபசாரவழக்கு எனக்கொள்க. காளிதன் என்ற பாம்பு வழிபட்டதால் ஏற்பட்ட சீகாழி என்ற பெயர்க் காரணத்தை விளக்கியவாறுங் கண்டு கொள்க.

கட்டார்துழாயன் தாமரையா னென்றிவர்காண்பரிய
சிட்டார்பலிதேர்ந்து ஐயம்வவ்வாய் செய்கலைவவ்வுதியே
நட்டார் நடுவே நந்தனுள நல்வினையாலுயர்ந்த
கொட்டாறுடுத்த தண்வயல்சூழ் கொச்சையமர்ந்தவனே. 11

11. ஆற்றின் நடுவே (ஓடம்செலுத்திய) மச்சகந்தி என்ற செம்படவப்பெண்ணைக் கூடிய பராசரன் என்ற முனிவர் பின்னர் தனது நல்வினையால் (சிவபூசையால்) பாவம் நீங்கி உயர்ந்ததும், கோணிய ஆறு புடைசூழ்ந்த குளிர்ச்சி மிக்க வயல்கள் சூழ்ந்ததுமான கொச்சைவயம் அமர்ந்தபிரானே! கட்டுதலைப் பொருந்திய துளசிமாலையையணிந்தவனான திரு மால் பிரமதேவன் என்ற இவர் காண்பதற்கரிய பெருமை பொருந்திய நீர், பிச்சையெடுக்கச் சென்றபோது, பிச்சையை ஏற்காது பிச்சையிட்ட பெண்களின் உடைகளைக் கவர்ந்து கொண்டீரே! (இது ஏன்?)

நட்டாறு என்பது நட்டார் என ஆயிற்று. நந்தன்ஆள என்றது பராசரர் மச்சகந்தி என்ற வலைஞர் குலப் பெண்ணைக் கூடியதைக் குறித்தது. இதனுல் ஏற்பட்ட தீவினையை

(கொச்சை) இங்குப்பராசரர் இறைவனைவழிபட்டுப் போக்கிக் கொண்டமையால் கொச்சைவயம் என்றேற்பட்ட பெயர்க் காரணத்தையும் குறிப்பால் விளக்கியவாறு கண்டுகொள்க. கொச்சை என்ற சொல்லுக்குக் கீழ்மை என்ற பொருள் அகராதிகளிற் காணப்படுகிறது. தீநாற்றம் என்றும் சிலர் உரை கூறுகின்றுர்கள். வயம் — ஜயம், இங்குப் போக்குதல் என்ற பொருள்கொள்க. எனவே, தீவினையை அல்லது கீழ் மையை அல்லது தீ நாற்றத்தைப் போக்கிய தலம் கொச்சை வயம் என்று பெயர்ப்பொருள் கொள்க.

கோட்டாறு என்பது செய்யுள் எதுகை நோக்கி கொட்டாறு எனவந்தது. கோணிய, (வளைந்த) ஆறு எனப் பொருள். முன்னர் சில திருப்பாடல்களிலும் கோட்டாறு என்று குறிப் பிடப்பட்டது வந்த இடங்களில் கண்டு கொள்க. "ஆறு உடுத்த" என்றது உடலை ஆடை சூழ்ந்து கொள்வது போல தலத்தை ஆறு சூழ்ந்து கொள்வதால் அதனை "உடுத்த" எனக் கூறினுர்.

கட்டார் — கட்டுதலைப் பொருந்திய அதாவது மாலை யாகத் தொடுக்கப்பட்ட என்பதாம். அல்லது கள் + தார் எனப்பிரித்து தேன் நிரம்பிய மாலை எனக் கொள்ளலுமாம்.

சிட்டார்' — சிட்டர் என்பது சிட்டார் என நீண்டது. மேலோர், உயர்ந்தவர் என்பது பொருள். சிஷ்டர் என்ற வடசொல்லின் தமிழ் வடிவம்.

கடையார்கொடிநன் மாடவீதிக் கழுமலவூர்க்கவுணி
நடையார்பனுவல் மாலையாக ஞானசம்பந்தன்நல்ல
படையார்மழுவன் மேல்மொழிந்த பல்பெயர்ப்பத்தும்
வல்லார்க்கு
அடையாவினைகள் உலகினுளும் அமருலகாள்பவரே. 12

திருச்சிற்றம்பலம்

12. வாயில்களில் கொடிகள் பொருந்திய நல்ல மாடங்களையுடைய வீதிகள் நிறைந்த திருக்கழுமலம் என்ற இந்த ஊரில் கவுணியர் குலத்துத்தோன்றிய ஞானசம்பந்தன் நல்ல நடைபொருந்திய பனுவல்மாலையாக மழுப்படையை ஏந்தின வனாகிய சிவபெருமான் மீது பாடிய இந்த பல்பெயர்ப்பத்து என்ற பதிகத்தைப் பாடவல்லவர்க்கு இந்த நிலவுலகில் வாழும் நாள் வரையில் தீவினைகள் வந்து பொருந்தாவாம். பின்னர் அவர்கள் தேவர் உலகத்தையும் ஆளுவர் என்பதாம்.

கவுணி — கவுணியன் என்ற இருடியின் கோத்திரத்தில் தோன்றியவர். வடமொழியில் கௌண்டின்ய கோத்திரம் என்பர்.

நடையார் — நடை பொருந்திய. நடை என்ற சொல் ஒழுக்கம், செல்வம், முறை முதலிய பொருள்களைத்தரும்,

பனுவல் — ஆகமம், கல்வி, சொல், நூல், புலமை முதலிய பொருள்கள். இவையனைத்தும் திருஞானசம்பந்தரது பதிகத்துக்குப் பொருந்துமாறு காண்க.

அடையாவினைகள் என்றது பிராரத்தவினைகளை அனுபவித்துக் கழிப்பரேயன்றி மேல் ஆகாமிய வினைகள் வந்து பொருந்தா என்பதாம்.

பல்பெயர்ப்பத்து என்ற இப்பனுவல்மாலை ஓதவல்லவர் இம்மையில் தீவினைகள் அடையப் பெருதவர்களாய் வாழ்ந்து மறுமையில் தேவருலகையும் ஆள்வர் என்பது பதிகப்பயன்.

சிவம்

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

## மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## புதிய விலை விவரங்கள்

சென்ற சில ஆண்டுகளாகக் காகித விலையும், அச்சுக் கூலியும் போட்டி போட்டுக்கொண்டு உயர்ந்து கொண்டே வருவது அன்பர்கள் அனைவரும் அறிந்ததேயாகும். இந்த நிலையில் நமது தமிழ் மாலை தயாரிப்புச் செலவும் மிகவும் அதிக மாகிக் கொண்டு வருகிறது. மூன்று ரூபாய் விலைக்கு 48 முதல் 56 பக்கங்கள்தான் பிரசுரிக்க இயலும். கூடுதலாகப் பக்கங்கள் பிரசுரித்தாலொழிய பதிகங்களுக்கு விரிவான உரை எழுத இயலுமா என்பதும் சந்தேகமே. ஆகவே எல்லா நிலைகளையும் மனதிற் கொண்டு 19-வது தமிழ் மாலை முதல் விலை உயர்த்த முடிவு செய்து பின்வருமாறு அமைத் துள்ளோம்.

### முதல் ஆறு தமிழ் மாலைகள்

ஒவ்வொரு தமிழ்மாலையும் தனிப்பிரதி ... ரூ. 2-00
முதல் ஆறு தமிழ் மாலைகளும் சேர்த்து ... ரூ. 10-00

### ஏழாவது தமிழ் மாலை முதல் பதினெட்டாவது தமிழ் மாலை வரை

ஒவ்வொரு தமிழ் மாலையும் தனிப்பிரதி ... ரூ. 3-00
ஏழாவது தமிழ் மாலை முதல் பதினெட்டாவது வரை 12 தமிழ் மாலைகள் ... ரூ. 30-00

பத்தொன்பதாவது தமிழ் மாலையிலிருந்து

ஒவ்வொரு தமிழ் மாலையும் தனிப்பிரதி ... ரூ. 4-00
ஒவ்வொரு ஆறு தமிழ் மாலைகளுக்கும் சலுகை
விலை ... ரூ. 20-00
108 தமிழ் மாலைகளுக்கும் சலுகை விலை ... ரூ. 225-00

சலுகை விலைகள் முன்பணமாகச் செலுத்தப்பட வேண்டும். 108 தமிழ்மாலைகளுக்கான சலுகை விலை ரூ 225ஐ மொத்தமாகவோ அல்லது தவணைகளாகவோ ஒரு ஆண்டுக்குள் செலுத்தலாம். சலுகை விலை முன் பணம் கிடைத்ததும் அதுவரையில் பிரசுரிக்கப்பட்ட தமிழ் மாலைகள் உடனடியாக அனுப்பப்பட்டு, பின் வருபவை ஒவ்வொன்றும் பிரசுரமானதும் அனுப்பப்படும்.

இனி தமிழ் மாலைகள் விரைவாக வெளி வருவதற்கு வேண்டிய முயற்சிகளையெல்லாம் எடுத்து வருகிறோம். மற்றும் ஒவ்வொரு தமிழ் மாலையும் 64 முதல் 80 பக்கங்கள் வரை தொடர்ந்து பிரசுரிக்கப்படும். எக்காரணம் பற்றியாவது தயாரிப்புச் செலவு குறையுமாயின் அதற்கேற்ற முறையில் பக்கங்கள் அதிகரிக்கப்பட்டு அதிகமான பதிகங்கள் வெளியிடப்படும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த விலை உயர்வு ஏற்கெனவே 158/- செலுத்தியவர்களையோ, தவணை முறையில் சந்தா செலுத்த ஒப்புக்கொண்டவர்களையோ பாதிக்காது. புதிதாக 19-வது தமிழ் மாலை முதல் சந்தா சேருபவர்கள் இந்த புதிய விகிதப்படி சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என்பதை இதன் மூலம் அறிவிக்கின்றோம்.

சிவம்

---

திருச்சண்பை விருத்தம் — 5

ஆறதே றுஞ்சடையான் அருள் மேவ அவனியர்க்கு
வீறதே றுந்தமி ழால்வழி கண்டவன் மென்கிளிமாந்
தேறல்கோ தித்தூறு சண்பகம் தாவிச் செழுங்கமுகின்
தாறதே றும்பொழிற் சண்பையர் காவலன சம்பந்தனே.

—நம்பியாண்டார் நம்பிகளருளியது, 11-ம் திருமுறை.



உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

## வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர் அருளியது

---

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்






யத்யத் கர்ம கரோமி
தத்ததகிலம்
சம்போ தவாராதனம்



Elango Achukoodam, 166, R. H. Road, Madras-4. Phone : 7 4 1 2 1

